# சன்மார்க்க தீபம்

## மூன்றாம் புத்தகம்



ஆக்கியோன்

C. V. நாராயண அய்யர், M.A. L.T.

*Assistant Professor of History, Presidency College, Madras.*

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி

சென்னை

 1935 [விலை அணா 8

# FOREWORD

I feel honoured by the request of the author to link my name with his in his work **SANMARGA DEEPAM** which is, as its name implies, a Lamp of Righteousness. The great danger to modern civilisation consists in the lower aims of life overwhelming and driving out the higher. Materialism, the worship of matter, is rampant everywhere. Mammon threatens to unseat God. Even in countries and communities paying homage to God, God is more present on the lips than in the hearts of men.

What, after all, is the purpose of human life? It is physical, mental, moral and spiritual perfection consummating itself in the realisation of God. It can be expressed in one word—*Culture*. Culture means sweetness; culture means light; culture means harmony; culture means happiness. There can be no real culture unless there is an intermingling of the ideal and the real.

The author has endeavoured in this work to introduce the youth of India into the ideal realm of ancient Indian culture and modern Western culture so that every boy and girl of India might be Indian and modern in a state ef harmonious concord. The heroic temperament—

> " One equal temper of heroic hearts,
> Made weak by time and fate, but strong in will
> To strive, to seek, to find, and not to yield"—

is the prime need of India to-day. This work is sure to create such "equal temper of heroic hearts" and therefore deserves wide public appreciation and encouragement.

K. S. RAMASWAMI SASTRI,
*District and Sessions Judge of Ramnad.*

# அறிவிப்பு

சன்மார்க்க தீபம்—மூன்றும் புத்தகம் என்னும் பெயருடைய இச்சிறு நூல் இக்கால மாணவர்க்கு அகன்ற அறிவினையும் சிறந்த ஒழுக்கத்தினையும் அளித்து, அவர்தம் வாழ்க்கையைப் பயன் பெறச் செய்ய எழுதப்பட்டதாம். இதன்கண் காணப்படும் நம் நாட்டுப் பெருமக்களின் சீரிய வரலாறுகளும், அயல் நாட்டு அறிஞர்களின் பேருக்கச் செயல்களைப் பற்றிய குறிப்புகளும், மனத்தை ஒரு வழிப்படுத்தும் இனிய கட்டுரைகளும் படிப்போர் வாழ்க்கை உயர்வடைய இன்றியமையாத் தூண்டு கோலாக இருக்குமென்னும் துணிபுடையேன்.

இச்சிறிய ஒரு நூலைப் படித்து அரிய ஒரு முன்னுரையளித்த என் நண்பர் **திவான்பஹதூர் கே. எஸ். இராமசாமி சாஸ்திரியார்** அவர்கட்கு எனது மனமார்ந்த நன்றி என்றும் உரியது.

அன்பன்,

**சி. வி. நாராயண ஐயர்**

# பொருளடக்கம்

“தாய்நாட்டு வீர மக்களே! சகோதர சகோதரிகளே!! நாம் ஒருவிதப் பயனையும் எதிர்பாராமல், பிறர்க்கு ஊழியஞ் செய்தலையே நம் கடமையாகக் கொள்ள வேண்டும்; ஊழியம், உதவி, தியாகம் முதலியன இல்லாமல் நமது வாழ்வைச் சிறப்பித்தல் இயலாது. நீங்கள் எங்கிருப்பினும், ஊழியஞ் செய்தே தீரவேண்டும். நீங்கள் ஒவ்வொருவரும் சமூகத் தொண்டாற்ற முன் வந்தாற்றான், நமது நாடு முன்னேற்றம் அடையும்”

—வேல்ஸ் இளவரசர்



சுவாமி விவேகானந்தர்

# சன்மார்க்க தீபம்

## மூன்ரும் புத்தகம்

---

### 1. கடவுள் நிலை

உலகினையும் உயர்திணை அஃறிணைப் பொருள்களை-யும் காண்கையில், இவை அனைத்தையும் ஓர் ஒப்பிலா அறிவுப் பொருள் படைத்திருத்தல் வேண்டுமென்பது தெள்ளிதிற் புலனுகிறது. இஃது உண்மையாயின், 'அவ்வறிவுப் பொருள் யாது? அஃது எங்கே உள்ளது?' என்னும் வினுக்கள் எழுமல்லவா? இவற்றிற்கு ஏற்ற விடை அறிந்தாற்றுன், நாம் அவ்வொப்பிலாப் பொரு-ளையும் அதன் உண்மைத் தன்மையையும் உள்ளவாறு உணர்ந்தவர் ஆவோம்.

இன்று இந்தியக் கவிச் சக்கரவர்த்தியாக விளங்-கும் இரவீந்திர நாத தாகூர் அவர்கள், அவ் வினுக்க-ளுக்கு ஏற்ற விடை பகர்தலை அடியிற் காண்க:

"ஓ துறவியே! நீ இருளடைந்த கோவிற் கதவுகளை அடைத்துவிட்டுத் தனியே அமர்ந்து செபமாலையை உருட்டிக்கொண்டு, இன்னும் மலர்களாலும் தூபங்க-ளாலும் தீபங்களாலும் மந்திரங்களாலும் பூசிக்கின்றனை. இங்ஙனம் செய்வதால் கடவுளை யடையலாம் என்பது உனது எண்ணம் அன்ரே? கடவுள் உன் முன்னரா

இருக்கின்றூர்? உனது கோவிலிற்றூ குடியுள்ளார்? விழித்து யோசித்துப் பார்!

"கேட்டியான நிலத்தை உழைத்து உழுதுகொண்டிருக்கும் உழவனிடத்தும், கற்களைத் தன் உடல் வருந்த உடைத்து வழிகளை உண்டாக்கும் கூலியாளனிடத்தும் அவர்—நீ நினைக்கும் கடவுள்—அதோ இருக்கின்றூர். அவர் வெயிலிலும் மழையிலும் அவர்களோடு இருக்கின்றூர். அவரது ஆடையில் மாசு படிந்துள்ளது.

"ஓ சந்நியாசியே! உனது தூய ஆடையைக் களைந்துவிட்டு, தினந்தோறும் வருந்தி உழைக்கும் அவ்வுத்தமர்களைப் போல நீயும் மண்ணிலும் சேற்றிலும் நடந்துவா; துன்பங்களுக்கு அஞ்சி வாழ்க்கையிலிருந்து ஓடாதே. ஏனெனில், துன்பப்படுகின்றவர் நடுவிலும், எளியவர் நடுவிலும் அவர் எப்போதும் தோன்றிக் கொண்டு இருக்கின்றூர். ஆதலின், உலகத்தின் தினசரி வாழ்க்கையில் நீயும் கலந்துகொள்வதே கடவுளிடம் கலந்ததாகிறது.

"நமது வாழ்க்கையில் கடவுள் சர்வ வல்லமை உள்ளவராக இருக்கிறூர். எவ்விடத்தில் உண்மையும் உழைப்பும் இருக்கின்றனவோ, அவ்விடத்தில் அவர் விளங்குகின்றூர். அவரைக் காண வேண்டுமாயின், நீ, பொது வாழ்க்கையில் கலந்துகொள். வாழ்க்கையே கடவுள்; கடவுளே வாழ்க்கை. அஞ்சாமையுடன் வாழ்க்கையைத் தூய்மையாக நடத்துவோன், தன் துன்பத்திலும் ஏழ்மையிலும் அவரைக் கண்டறிவான்

"மோட்சம் எங்கே இருக்கின்றது? வாழ்க்கையில் கலந்துகொள்ளாமல் எங்கேனும் ஓடிப்போய்விடின், மோட்சம் கிடைக்கும் என்று எண்ணுகின்றனையோ? இறைவர் தம்மைத் தாமே எல்லாப் பந்தங்களுடனும் படைத்துக்கொண்டுள்ளார். அவர் எப்பொருளினும் எக்காரியத்திலும் விளங்குகின்றார் என்பதைக் கணமும் மறவாதே.

"ஆதலின், அன்பனே! மணம் வீசும் மலர்களையும் சுகந்த தூபங்களையும் விட்டுவிட்டு, வெளியே வா; அஞ்சாமையுடன் தூய வாழ்க்கையை நடத்து; அவரைக் கண்டு மகிழ்வாய்.

"அவரது அமைதியான காலடிச் சத்தத்தை நீ கேட்டதில்லையோ? அவர் வருகின்றார், வருகின்றார், எப்போதும் வருகின்றார். ஒவ்வொரு கணத்திலும், ஒவ்வொரு பகலிலும், ஒவ்வோர் இரவிலும், ஒவ்வொரு யுகத்திலும் அவர் வருகின்றார். சித்திரை மாதத்து வேனிலில் பெருங்காட்டினூடே உள்ள ஒற்றையடிப் பாதை வழியாயும் அவர் வருகின்றார். ஆவணித் திங்கட் பெருமழையில் இடி முழங்கி மின்னிய இருண்ட இரவிலும் மேக வாகனராய் அவர் வருகின்றார். துன்பத்தின் மேல் துன்பம் வந்து என்னை நெருக்கித் துன்புறுத்துகையில், அவரது அமைதியான காலடிச் சத்தம் என் செவியில் விழுகின்றது. பொன்னெனப் பொலியும் அவரது திருப்பாதம் என்னைத் தீண்டுவதால், என் கவலையொழிய, அகமும் முகமும் மலர்கின்றன."

அன்புள்ள பிள்ளைகளே, இரவீந்திர நாதரின் அருளுரையினின்றும், அவ்வினாக்களுக்கு விடை உதிக்-

கின்றதல்லவா? அவ்வறிவுப் பொருளே கடவுள். 'கடவுள் எங்கும் உள்ளவர்; நம் இதயத் துடிப்பிலும் பேச்சிலும் மூச்சிலும் அவர் அருள் வழிந்தவண்ணமே இருக்கிறது; இவ்வாறு நம்முள்ளே கலந்துறையும் அவ்விறைவரைக் காண, ஆடி ஓடி அலைய வேண்டா; நூல்களைப் புரட்ட வேண்டா; எங்கும் அன்பு மயமாக மிளிரும் அவரை எங்கும்-எப்பொழுதும் வழிபடலாம்; எறும்பும் நம் உடன் பிறப்பே; அன்பே ஆண்டவன்; உயிர்களுக்குச் செய்யுந் தொண்டே ஆண்டவருக்குச் செய்யுந் தொண்டாகும் என்பன நன்கு விளங்குகின்றன அல்லவா?

---

## 2. தூய்மை

1. தூய்மை, எளிமையினின்றும் ஒழுங்கினின்றும் தோன்றுவதாகும். —**எமியல்**

2. தூய்மை எனினும் சுத்தம் எனினும் ஒன்றே. அழகை விரும்புவோன் தூய்மை உடையவனுயிருப்பான்.

—**ஜேம்ஸ் ஆலன்**

தமிழ்ச் சங்க நூல்களில், குறப் பெண்கள் தினைப் புனக் காவல் புரியுந் திறமையைப் படித்துணர்கையில் தூய்மையின் இலட்சணம் மிகத் தெளிவாக விளங்குகின்றது. மலைநாட்டுக் குறப் பெண்கள் தினைப் புனங்களில் காவல் புரிதல் வழக்கம். ஒவ்வொரு தினைப்புனத் தலைவன் மகளும் அவள் தோழியரும் புனத்தில் உடனிருப்பர். அவர்கள் அதிகாலையில் சுனை நீரில் நீராடுவர்; தூய பருத்தியாடைகளை யணிவர்; பரண்மீது

நின்று, இனிய பாக்களைப் பாடிக்கொண்டு தலை மயிரை ஆற்றுவர். அவர்தம் குரலோசையைக் கேட்டு யானை-களும் புள்ளினங்களும் தம்மை மறந்து துயில்கொள்-ளும். ஆ! என்ன ஆனந்த நிலை!

அக்குறப் பெண்கள் அழகிய பூங்காவையும் வைத்திருப்பர்; அழகிய நறுமணம் வீசும் மலர்ச் செடி-களை வைத்துப் பயிர் செய்வதில் அவர்கட்கு அளவிலா விருப்பம் உண்டு. அச்செடிகளை அவர்கள் காலையி-லும் மாலையிலும் கவனித்து நீர் ஊற்றித் தளிர்களையும் மலர்களையும் கண்டு மகிழ்ச்சி உறுவர்; மலர்ச் செடி-களை வரிசை வரிசையாக வைத்துக் களைபோக்கித் தம் அகம் குளிர விழிகள் மலர அவற்றை அழகுபடுத்தலே அவர் தம் தொழிலாகக் கொண்டவர். அவர்தம் அன்பென்னும் நன்னீராற்றான் அவை வளர்ந்து மலர்-களைத் தருகின்றன; தம்மைப் போற்றி வளர்க்கும் அக்குற மகளிர்பால் தமக்குள்ள அன்பைக் குழையக் காட்டுவதே போலத் தம் மலர்களை இதழ் விரியச் செய்கின்றன. மலர்ந்த பூக்களைக் கண்ட மகளிர் அளப்பரிய களிப்பெய்துகின்றனர். அந்நிலையில் மாசற்ற அவர்தம் அகமும் முகமும் ஒருங்கே மலர்-கின்றன. ஆ! அப்போது அவர்கள் அம்மலர்களினும் மென்மையராயும் அழகியராயும் விளங்குகின்றனர். தூய்மையே உருவா யமைந்த தெய்வ மகளிர் அவ-ரெனக் கூறலாம்.

அவர்களுக்கு உயர்ந்த பட்டாடைகள் உண்டா? வைர அணிகள் உண்டா? பொன்னாபரணங்கள் உண்டா? அல்லது அவர்கள் அரசர்தம் புதல்விமாரோ

இல்லை! இல்லை! பருத்தியாடை கட்டிய வேடர் புதல்-வியர்; இயற்கை என்னும் தாய் மடியில் இனிது விளை-யாடுபவர்; ஆதலின், இயற்கை அழகுடன் விளங்கு-கின்றனர். செயற்கை அழகைவிட இயற்கை அழகே இன்பத்தைத் தரவல்லது; இணையிலா அழகைத் தர வல்லது; ஒழுக்கத்தை வளர்ப்பது; உயிரைக் காப்பது.

இக்குற மகளிர் காட்டகத்தே உறைபவர்; வானுறவோங்கிய மலைச் சாரலில் உள்ள தினைப்புனப் பரண்களில் இருப்பவர்; மனத்தை ஒரு வழிப்படுத்தும் ஏகாந்த இளமரச் சோலைகளில் விளையாடுபவர்; தமக்-குள்ள வேலையை மிக்க அன்போடும் ஊக்கத்தோடும் செய்பவர்; தினைக் கதிர்களைத் தம் உயிரினும் மேலாகக் காத்து வருபவர்; மலர்ச் செடிகளை அன்போடு வளர்த்து வருபவர். ஆதலின், அம்மகளிர் நடக்கும் இடமெல்லாம்—விளையாடும் இடமெல்லாம்—உறங்கும் இடமெல்லாம்—நீர் விளையாடும் சுனையெல்லாம்—தூய்-மையாக இருக்கின்றன. அத்தூய்மையின் பிரதி பிம்-பமே அவர்கள் அகத்திலும்—முகத்திலும்—ஏன்? அவர் தம் உருவமெல்லாம் ஒளிர்கின்றது.

மனத்துக்கு மகிழ்ச்சியைப் பயக்கும் சிறந்த கருவி தூய்மையே. தூய்மையாயுள்ள எவ்விடத்தையும், எவ-ரையும் உலகினர் விரும்புதல் இயல்பே. தன் கடை-யில் உள்ள பொருள்களைத் தூய்மைப்படுத்தி, அழகாக அடுக்கியுள்ள கடைக்காரன் வீற்றிருக்கும் இடத்தைத்-தான் தேனிருக்கும் இடத்தைச் சுற்றும் வண்டுகளை யொப்ப மக்கள் சுற்றுகின்றனர். ஆ! தூய்மை உடைமையால் அக் கடைக்காரன் பற்பலர் அன்புக்கு

இலக்காகின்றான் ; நல்ல வியாபாரம் நடக்க வழி உண்டாக்குகிறான். அவனிடம் உள்ள பொருள்கள் வேறு கடைகளில் இருந்தும், மக்கள் அவனிடத்திலேயே வரக் காரணம் யாது? தூய்மை! தூய்மை!!

உடலைத் தூய்மையாக வைத்துக்கொள்வோர் இறப்பென்னும் இயற்கை விதியையும் கடந்துவிடுகின்றனர். நம் தாய்நாட்டுத் தவசிகள் பலரும் பல ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்ததாக வேதங்களும் இதிகாசங்களும் முழங்குகின்றன. இதனால், தூய்மை என்பது நமனையும் போக்கும் நன் மருந்து என்பது விளக்கமன்றோ?

வைத்திய சாலைகளைக் கவனியுங்கள்! அங்குள்ள சுவர்களையும், தரையையும், ஏன்? ஒவ்வொரு பொருளையும் உற்று நோக்குங்கள்: அங்கு நோயாளிகளைக் கண்ணை இமைகள் காப்பது போன்று காக்கும் தாதியரையும், வைத்திய நிபுணர்களையும் கவனியுங்கள். வைத்திய சாலையில் உள்ள உயர்திணை அஃறிணைப் பொருள்கள் யாவும் தூய்மையாக இருத்தலைக் காண்பீர்கள். அத்தூய்மை இல்லாவிடின், நோய் அகல்வதேது?

நகரங்களில் உள்ள புத்தக நிலையங்களை நோக்குங்கள்! அங்குப் புத்தகங்கள் மாசின்றிச் செவ்வையாய் அடுக்கப்பட்டிருத்தலைக் காண்பீர்கள்; அந்நிலையில் உங்கள் மனம் எவ்வாறு இருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள். உங்கள் மகிழ்ச்சிக்குக் காரணம் என்ன? அங்குள்ள தூய்மையும் செம்மையுமே அன்றோ?

பெரும்பாலும் உங்கள் புத்தகங்களைக் கொண்டும், கையெழுத்தைக் கொண்டும், நீங்கள் தூய்மை உடையவர்களா? இல்லையா? என்பதை எளிதில் கூறிவிடலாம். உங்கள் புத்தகங்களில் மாசு படிந்து இருந்தாலும், உங்கள் கையெழுத்து நன்றாயிராவிடினும், நீங்கள் தூய்மை அற்றவர் என எளிதில் கூறிவிடலாம். நீங்கள் உங்கள் பழக்க வழக்கங்களில்—உங்கள் ஊண் உடைகளில்—தூயவராயிருப்பின், உங்கள் புத்தகங்களும் கையெழுத்தும் தூய்மை உடையனவாயிருக்கும். இதனை எப்போதும் மனத்தில் இருத்துங்கள்.

ஆகவே, அன்புள்ள பிள்ளைகளே, உங்கள் இல்லம், உங்கள் உடல், உணவு, உடை, பொருள்கள், மனம், செயல் யாவும் தூய்மையாயிருத்தல் வேண்டும். அவற்றைத் தூய்மையாக வைத்திருப்பின், நீங்கள் ஒப்பிலா ஆனந்த நிலையை அடைவீர்கள். ஏனெனில், தூய்மையாயிருத்தல் கடவுள் நிலைக்கு அடுத்த நிலையாகும்.

'Cleanliness is next to Godliness.'

—ஓர் ஆங்கிலப் பழமொழி

## 3. குருகுலங்கள்

1. நமது தாய்நாட்டின் பண்டைப் பெருமைக்குக் குரு குலங்களே முழுமுதற் காரணம் என்று சிறிதும் அஞ்-சாது கூறுவேன். —இரவீந்திர நாத தாகூர்

2. பகைவரையும் சகோதரரெனக் கருதி நேசிக்கவும், சீவகாருண்யம் ததும்பவும், தன்னடக்கம் பெறவும், அறிவும் ஒழுக்கமும் சிறக்கவும் குருகுலங்கள் தேவை-யானவை. —காந்தியடிகள்

குருமார்களும் (ஆசிரியரும்) மாணவர்களும் தூய அன்புடன் சேர்ந்து ஒரே குடும்பத்தினர்போல வாழ்ந்து வருவதால், அவர்கள் இயக்கம் குருகுலம் என்னும் பெயர் பெற்றது. இத்தகைய குருகுலங்கள் ஆற்றோரங்-களிலோ, மலைச்சாரல்களிலோ, அழகிய அமைதி நிலவும் இடங்களிலோ மரம்-செடி-கொடி-இலைகள் முதலிய-வற்றால் வீடுகளாக அமைக்கப்பட்டிருக்கும். இவற்றில் ஆசிரியரும் மாணவரும் ஒன்றுகூடி வசிப்பர். மாணவர் எப்போதும் ஆசிரியருடன் பழகுவதால், ஆசிரியர் கொண்டுள்ள தூய பழக்க வழக்கங்கள் முதலியன மாணவர்க்கு இயற்கையாகவே படிகின்றன. அவர்கள் குரு பக்தி, அன்பு முதலிய சிறந்த குணங்களைப் பெற்று உண்மை மனிதர்களாக விளங்குவார்கள். குருகுல ஆசிரியரும் சகல கலா வல்லவராகவும், தூய மனமும் ஒழுக்கமும், உடையவராகவும் இருப்பர். ஆ! இயற்கை அழகினுக்கே இருப்பிடங்களான மலைச் சாரல்கள், ஆற்றோரங்கள் முதலிய இடங்களில் இலைக் குடிசை-களில் ஆசிரியரோடு இனிதுறையும் குருகுல மாணவர் பெற்றுள்ள பேறுதான் என்னே!

இத்தகைய குருகுலங்கள் நம் தாய் நாட்டில் பல இருந்தனவெனச் சரித்திர வாயிலாக அறிகின்றோம். இன்றும் நம் நாட்டை அழகுறச் செய்ய இரண்டு குருகுலங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்று கவி இரவீந்திர நாத தாகூர் அவர்களால் நடத்தப்பெறும் சாந்திநிகேதனம் என்பது. அது கல்கத்தாவிலிருந்து சுமார் நூறு மைல் தூரத்தில் உள்ள போல்பூர் என்ற இடத்துக்கருகில் அமைந்துள்ளது. இந்திய ஆத்தும ஒளியை உலகெலாம் பரப்பவும், மேனாட்டுக் கலைகளைக் கீழ் நாட்டாரும்—கீழ் நாட்டுக் கலைகளை மேனாட்டாரும் அறிந்து நன்மையுறவும், கலை ஆராய்ச்சிகள் புரியவும் இக்குருகுலம் அமைக்கப் பெற்றுள்ளது. மேனாட்டு மாணவரும் இக்குருகுலத்தில் சேர்ந்து அமைதியான வாழ்க்கையை நடத்தி வருக்கின்றனர். கவி இரவீந்திரர் தமது முதுமைப் பருவத்தையும் கவனியாமல், மாணவரோடு உடனுறைந்து ஆடிப்பாடிக் கல்வி கற்பித்து வருவது பெரிதும் குறிப்பிடத் தக்கது.

இரண்டாவதாக ஹரித்துவார குருகுலம் என்னும் பெயரோடு விளங்கும் குருகுலம் இமயமலை அடிவாரத்தில் உள்ள ஹரித்துவாரத்துக்கு அப்பால் கங்கா நதியின் இடக் கரையில் அமைந்துள்ளது. இது 1902-ஆம் ஆண்டு சுவாமி சிரத்தானந்தரால் தாபிக்கப் பெற்றது.

வேதங்களையும், வடமொழியையும் அதன் இலக்கியத்தையும், ஆங்கிலத்தையும் அதன் இலக்கியத்தையும், ஹிந்தி மொழியின் மூலம் தற்போதைய கல்வியையும், பிரமசாரிகளின் கடமைகளையும், உடற்பயிற்சி, பிராணயாமம் முதலிய பயிற்சிகளையும், தொழிற் கல்வி-

யையும் உத்தியோகக் கல்வியையும் புகட்டுதலே இக்குருகுலத்தின் நோக்கமாகும்.

இக்குருகுலத்தின் கட்டடங்களைக் கட்டவும் அவற்றிற்கருகே உள்ள காங்கிரி கிராமத்தை வாங்கவும் தமது மொத்த ஆஸ்தியையும் அளித்த மாபெருவள்ளலாரான முன்ஷி அமான் சிங்கு என்பவர் அக்குருகுலத்திலே உள்ள ஒரு குடிசையில் வசிக்கின்றனர் என்றால், அவர் தூய எண்ணத்தையும் அறச் செயலையும் என்னெனப் புகழ்வேம்! அவர் பெயரும் புகழும் என்றும் நிலை பெறுவனவாக!! இன்றளவும் பல பெருமக்கள் இலட்சக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் இக்குருகுலத்துக்குப் பொருளிதவி செய்து வருகின்றார்கள். ஆகவே, இது வளர்பிறை மதியே போல மிக உன்னத நிலையோடு வளர்ந்து வருகின்றது.

ஆரியப் பிரதிநிதிச் சபையின் நிருவாகக் கூட்டத்தினரால் இக்குருகுலம் கவனிக்கப் பெற்று வருகின்றது. கல்வி சம்பந்தமானவற்றைக் குருகுலத் தலைவர் கவனித்து வருகின்றார். குருகுல நிருவாகம் ஒரு கவர்னரால் நடைபெறுகின்றது.

மிகச் சிறிய அளவில் குறைந்த மாணவரைக் கொண்டு ஆரம்பிக்கப் பெற்ற இக்குருகுலம் தற்போது கல்லூரியில் 4 வகுப்புகளையும், உயர்கலாசாலையில் 10 வகுப்புகளையும் பெற்றுள்ளது பாராட்டற்பாலது. இதில், வேத சாத்திரக் கல்லூரி, கலா கல்லூரி, ஆயுர்வேதக் கல்லூரி என மூன்று கல்லூரிகள் இருக்கின்றன. ஒவ்வொரு கல்லூரியும் மிகத்திறமையும் புகழும்பெற்ற பேராசிரியர்களால் நடத்தப்பெறுகின்றது. வைத்தி-

யக் கல்லூரியில் ஆயுர்வேத வைத்தியத்துடன் மேனாட்டு வைத்திய முறையும் போதிக்கப்பெறுகின்றது. இரசாயன சாத்திரம், பூகோள சாத்திரம், வேத சாத்திரம் வைத்தியம், தேச சரித்திரம், சித்திரம், மனோ சாத்திரம், சிக்கன சாத்திரம், மேனாட்டுத் தத்துவ சாத்திரம், விவசாயம், கைத்தொழில், சங்கீதம், கணிதம், முதலான பல திறப்பட்டவை ஹிந்தி மொழியின் மூலமே கற்பிக்கப்படுகின்றன. பல திறப்பட்ட பாட புத்தகங்கள் குருகுல ஆசிரியர்களாலேயே தயாரிக்கப் பெறுகின்றமை குறிப்பிடத் தக்கது. ஆங்கிலம் ஆறும் வகுப்பிலிருந்து இரண்டாவது மொழியாகப் போதிக்கப்படுகிறது.

குருகுலத்தில் காய்-கறித் தோட்டங்களும், தாவர ஆராய்ச்சித் தோட்டமும், பூந்தோட்டமும், இருக்கின்றன. புத்தக நிலயம், வாசகசாலை, வைத்தியசாலை, சாத்திர ஆராய்ச்சி சாலைகள், மாணவர் சங்கங்கள், ஆசிரியர் சங்கங்கள், தர்க்க சபைகள் முதலியவை அமைந்துள்ளன. குருகுலத்துக்கென ஒரு பத்திரிகை நடத்தப்படுகிறது.

இனி, இக்குருகுலத்தின் ஒரு நாளைய கால அட்டவணையைக் கவனிப்போம்: மாணவர் காலை நான்கு மணிக்கு எழுதல் வேண்டும்; உடனே யாவரும் வெளியே சென்று மீள்வர்; அரைமணிநேரம் உடற்பயிற்சி செய்வர்; ஐந்து முதல் ஐந்தரை மணிவரையில் கங்கா நதியில் நீராடுவர்; பின்னர்ப் பூசை செய்வர்; இவை யாவும் நடைபெற்ற பின்னர்ச் சிறிது காலை உணவு அளிக்கப்படுகிறது. ஒன்பதே முக்கால் மணிக்கு வகுப்புகள் ஆரம்பமாகி நாலே கால் மணிக்கு முடிவடை-

கின்றன. இதற்கிடையில் அரைமணி நேரம் ஓய்வு தரப்படுகிறது. அவ்வேளையில் சிற்றுண்டி அளிக்கப்படுகிறது. நாலே முக்காலிலிருந்து ஐந்தே முக்கால் மணி வரையில் கால் பந்து முதலியன விளையாடலாம்; அதன் பின்னர் ஆறரை வரையில் மாணவர் சந்தியாவந்தனம் செய்வர்; பின்னர் ஏழு மணிக்கு உணவு கொள்வர்; அதன் பின்னர்ப் படிப்பர்; ஒன்பது மணிக்கு உறங்கச் செல்வர்; கல்லூரி மாணவர் இரவில் பத்து மணி வரையில் படிக்கலாம்.

கோடையாயின், காலை ஆறேகால் மணி முதல் பத்து மணி ஐம்பது நிமிடம் வரை காலை வகுப்புகள் நடைபெறும். பின்னர்ப் பகல் உணவு; அதன் பின்னர் ஓய்வு; மாலை இரண்டேமுக்கால் மணி முதல் ஐந்தே கால் மணி வரையிலும் மாலை வகுப்புகள் நடைபெறும்.

இக்குருகுல மாணவர் ஒழுக்கத்தை உயிரினும் சிறப்பாக எண்ணுகின்றனர்; மனிதர்க்கு இருக்க வேண்டும் தன்மதிப்பு, முயற்சி, ஊக்கம், பொறுமை, அன்பு, பிரார்த்தனை, நாட்டுப்பற்று, மொழிப்பற்று, தொண்டு செய்தல் முதலான உயரிய குணங்களைப் பெற்று மிளிர்கின்றனர். இவர்கள் சாதிமத வேறுபாடுகளைக் கவனிப்பதில்லை. இதினின்றும் வெளிப் போந்தவர்கள் கல்வி, மதப் பிரசாரம், சமூகத் தொண்டு, பத்திரிகை நடத்தல், நாட்டுச் சேவை முதலிய அரிய பெரிய வேலைகளிற் கலந்து உழைக்கின்றார்கள் எனின், இக்குருகுலத்தால் நாட்டுக்கு உண்டாகும் நன்மையை யாதெனப் புகழ்வேம்!

இத்தகைய குருகுலங்கள் பல ஒவ்வொரு மாகாணத்திலும் ஏற்பட்டு, இயற்கை அன்னையின் இனிய மடிமீதிருந்து பிள்ளைகள் நல்லொழுக்க முறைகளையும், கல்வியறிவினையும், தூய வாழ்வினையும் பெறச் செய்யின், நம் தாய்நாடு பூலோக சுவர்க்கமாக விளங்குமன்றோ?

---

## 5. சேது லட்சுமிபாய் அம்மையார்

1. திருவாங்கூர், கண்கொள்ளாக் காட்சி தரும் கந்தருவநாடு.

—லார்டு கன்னிமாரா

2. இந்தியாவின் திறம் வாய்ந்த சித்திரம் எனப் புகழத்தக்க அழகு வாய்ந்த திருவாங்கூரை மிக உன்னத நிலையில் ஏழாண்டுகள் நிறைந்த அருளோடு அரசாண்ட **மகாராணி சேது லட்சுமிபாய்** அவர்களின் திருப்பெயர் தேசசரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பெறல் வேண்டும். —இராமானந்த சாட்டர்ஜி

இந்தியாவின் தென் கோடியில் மலையாள நாடாய் அமைந்து கிடப்பது திருவாங்கூர் என்பது. இந்நாட்டில் இயற்கை அன்னையின் அழகிய காட்சிகள் யாவும் மலிந்துள்ளன. எங்குப் பார்க்கினும் மலைத் தொடர்கள், மரச் சோலைகள், நீர் நிலைகள், வளங்கொண்ட காடுகள் முதலியன இடையறா இன்பத்தை அளித்துக்கொண்டிருக்கின்றன.

மிகப் பழைய காலந்தொட்டே, முடியுடை மூவேந்தருள் ஒருவரான சேர வமிசத்தைச் சேர்ந்தவரெனக் கூறப்படும் இந்நாட்டு அரச பரம்பரை பெருமை

சான்றதாகும்; ஆட்சிமுறை மிகச் சிறந்ததாகும். நாட்டுச் சட்ட திட்டங்கள், நீதி முறை, நிருவாகப் பொறுப்பு இவற்றிற்கு அரசரே அதிகாரியாவர். அவருக்குத் துணை புரிய அமைச்சர் ஒருவர் மன்னராலேயே நியமிக்கப்படுகிறார். அமைச்சருக்குத் துணையாக அரசாங்கக் காரியதரிசிகள் இருக்கின்றார்கள். அவர்களின் கீழ்ப் பல இலாகாக்கள் இருந்து வருகின்றன. அமைச்சருக்குத் திவான் என்பது பெயர். இவரே திருவாங்கூர்ச் சட்டசபைத் தலைவராகவும் இருப்பார்.

இந்நாட்டில் பொதுவாக விவசாயமும் கைத்தொழிலும் சாதாரண நிலையிலேயே இருந்து வருகின்றன. கல்வி நிலையில் இந்தியாவிலேயே சிறந்த நாடாக விளங்குவது திருவாங்கூர் சமஸ்தானமே ஆகும். இங்குத் தாய்மொழிக் கல்வி, ஆங்கிலக் கல்வி, உயர்தரக் கல்லூரிக் கல்வி என்ற மூன்று முறைகளில் கல்வி அளிக்கப்படுகிறது. தாய்மொழிக் கல்வி அனைவர்க்கும் இலவசமாகவே அளிக்கப்படுகிறது. பெண் மக்களுக்கு எவ்விதக் கல்விக்கும் பாதிக் கட்டணமே விதிக்கப்பட்டுள்ளது. இங்கு, 8 கல்லூரிகள், 246 ஆங்கிலக் கலாசாலைகள், 3,332 தாய்மொழிப் பள்ளிகள் இருக்கின்றன. பெருவாரியான பெண்கள் மேற்கூறிய எல்லாக் கலாசாலைகளிலும் கல்வி பயின்று வருவது குறிப்பிடத்தக்கது.

இச் சமஸ்தானத்தில் நவீன உணர்ச்சி, பெண்கள் முன்னேற்றம், சீர் திருத்த நிலை இம் மூன்றுக்கும் பெருங் காரண கர்த்தராக இருந்தவர் மஹாராணி சேது லட்சுமி பாய் அம்மையார் ஆவர். இவ்வம்மையார்

1924-ஆம் ஆண்டில் தமது 28-ஆம் வயதில் மிக நெருக்கடியான நிலையில் இச்சமஸ்தான அரசுரிமையை ஏற்றுக்கொண்டார். இவர் 1931-ஆம் ஆண்டு அரசாட்சியைத் தம் தங்கை மகனுன சித்திரைத் திருநாள் மஹாராஜாவுக்கு வழங்கினர். எனவே, இராணியார் அரசாண்ட காலம் ஏழாண்டுகள் ஆகும். இக்குறுகிய கால அளவில் இவர் பெண்ணுலகம் புகழத் தக்கவாறு பெரிய சீர்திருத்தங்களை நாட்டிற் செய்தமை மிகவும் போற்றற்குரியது. இவர், பெருந்தன்மை, தூய நிறைவு, பரோபகார லட்சியம் ஆகிய உயர் குணங்களின் பயனாய்த் தம் குடிகளின் நல்லெண்ணத்தை எளிதிற் பெற்றனர்; தம் மகுடாபிஷேகத்தின்போது சாதி சமய வேற்றுமைகளைப் புறக்கணித்து அனைவர்க்கும் அரச அவையில் இடமளித்தனர். திருவாங்கூர் சரித்திரத்திலேயே கண்டிராதவாறு இராணியார் தாம் முதன் முதலில் இந்து அல்லாத ஒருவருக்குத் திவான் பதவியை அளித்தனர்; அரசாங்கக் கோயில்களில் நடந்து வந்த மிருகப் பலியை அடியோடு நிறுத்தி, அரசாங்கப் பாதுகாப்பு ஏற்படுத்தினர்; கோவில்களில் வேலை செய்துகொண்டிருந்த தேவதாசிகளையும் நீக்கிவிட்டனர்; சட்டசபையிலும் நகரப்பரிபாலன சபைகளிலும் பெண்களை அங்கத்தினராக நியமித்தனர்; சிலருக்கு அரசாங்க உத்தியோகங்களை யளித்தனர்; விவசாய நீர்ப்பாசன வசதி, குழாய்த் தண்ணீர், இருப்புப் பாதைப் பெருக்கம், மின்சார விளக்கிடுதல் முதலிய பல துறைகளிலும் தக்க உத்தியோகஸ்தரை வைத்து வேலை செய்யுமாறு ஏவினர்; அரண்மனைக்குச் சொந்த-

மான நிலங்கட்குச் செலுத்த வேண்டிய நெல் முறையை நீக்கிப் பண முறையைப் புகுத்தியதும் பெரிய சீர்திருத்தமே யாகும்.

பெண் கல்வியில் இராணியார் மிக்க ஊக்கம் காட்டி வந்தனர். சமஸ்தானப் பெண்மக்கள் யாவரும் ஆடவரைப் போன்றே சமவுரிமைகளுடன் வாழ்ந்து வருகின்றனர். விதவைக் கோலம் இங்குக் காண்பது அரிது. விவாக விஷயங்களில் இந்நாட்டுப் பெண்களுக்குப் பெரும் கட்டுப்பாடுகள் கிடையா.

இங்ஙனம் பெண்கள் முன்னேற்றத்துக்குப் பெரிதுழைத்த பெருமை மஹாராணி சேது லட்சுமிபாய் அம்மையார்க்கே உரியது. இவர்கள் நீண்ட ஆயுளைப் பெற்று இன்னும் பல அரிய சீர்திருத்தங்களை இப்போதைய அரசரைக் கொண்டு செய்யுமாறு எல்லாம் வல்ல திருவருள் துணைபுரியுமாக.

---

## 5. குடும்பம் கூறுவது யாது?

1. *ஜன சமூகத்துக்கு உழைக்க ஆவல் கொண்டவனே! அந்த வேலையை உன் வீட்டில் ஆரம்பம் செய்; உனக்கும், உன் மனைவி மக்களுக்கும், அண்டை வீட்டுக்காரர்க்கும் உதவி செய். வீணாய் மயங்காதே. அருகில் உள்ள ஒன்றைச் செம்மையாய்ச் செய்யாத நீ, தூரத்தில் உள்ள ஒன்றைச் செய்வதெங்ஙனம்?* —**ஜேம்ஸ் ஆலன்**

ஆண்—பெண்—குழந்தைகள் என முப்பகுதியினரும் இரத்தக் கலப்பால் கட்டுப்பட்டு அன்பு வயத்தராய் விளங்கும் தொகுதியே குடும்பம் எனப்படும். பெற்றோர், உடன் பிறந்தோர், மனைவி, மக்கள் என்-

போர் ஒருங்கு சேர்ந்து இருப்பது குடும்பம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது. இன்பத்திலும் துன்பத்திலும் இக்குடும்பத்தார் ஒன்றுபட்டே இருக்கின்றனர். ஏன்? ஒரே குடும்பம்; ஒரே உதிரக் கலப்பு.

பல ஆடவர்—பெண்டிர் ஒன்றுகூடிச் சங்கங்களிலும் சாப்பாட்டு விடுதிகளிலும் வாழ்கின்றார்கள்; எனினும், ஒரு குடும்பத்தினர்க்குள் உள்ள அன்பும் ஒற்றுமையும் அவர்களிடம் காண இயலுமா? இயலாது! இயலாது!! ஏன்? சங்கங்களோ—பிறவோ மனிதரால்—செயற்கையால்—உண்டானவை. ஆதலின், அன்பையோ, ஒற்றுமையையோ தியாகத்தையோ அங்கு எதிர்ப்பார்த்தல் இயலாது. ஆனால், குடும்பம் இயற்கை என்னும் தெய்வீகப் பிணைப்பால் உண்டானது. இயற்கையாக உண்டாகும் எப்பொருளிலும் அன்பையும் ஒற்றுமையையும் காணலாம்.

அன்பு, ஒற்றுமை, இன்பம், சமாதானம் என்பனவற்றுக்குச் சிறந்த இருப்பிடம் குடும்பமே ஆகும். பகல் முழுவதும் வேலை செய்ய வெளியே சென்ற ஆடவர் அந்திப்போதில் அகத்தை அடைவர். அன்னார் வருகையை ஆவலுடன் எதிர்நோக்கும் மனைவி மக்களும் பெற்றோரும் அன்பு கனிந்த உள்ளத்தராய் இருப்பர். வீட்டையும் ஆடவர்க்கேற்ற உபசாரங்களையும் மனைவியர் செய்து, அமுதூட்டி அகங் குழைவர். யாவரும் ஒருங்கே அமர்ந்து அமுதுண்ணும் நிலை இன்பநிலை அன்றோ? பெற்றோர், உடன் பிறந்தார், மனைவி, மக்கள் அனைவரும்—குடும்பத்தில் உள்ள யாவரும ஒருங்கே இருந்து பேசுதல், களித்தல், மததஙகைய

பேரானந்தத்தை விளைவிக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்!

இத்தகைய அன்பு மயமான குடும்பத்திலிருந்தே மனித சமூகம் தோன்றுகின்றது. எங்ஙனமெனின், குடும்பத்திற்கு வேண்டும் - குடும்பத்தில் இயற்கை-யாகத் தோன்றுகின்ற அன்பு, ஒற்றுமை, பொறை, பிழை பொறுத்தல், உண்மை, ஊக்கம், சமத்துவம் முதலிய உயரிய குணங்கள் மனித சமூகத்துக்கும் இன்றியமையாதவை. பல குடும்பங்களின் சேர்க்கையே சமூகம் அன்றோ? ஆதலின், அத்தகைய சமூகத்தில் குடும்பத்தின் உயரிய குணங்கள் காணப்படுவதியல்பே அன்றோ?

ஒருவன் ஒரு குடும்பத்திற்குச் செய்ய வேண்டும் கடமைகள் எவையோ, அவற்றையே சமூகத்துக்கும் செய்ய வேண்டுபவனாகின்றான். ஆகவே, அவன் தன் கடமைகளைக் குடும்பத்தில் செவ்வையாய்ச் செய்வா-னாயின், சமூகத்திலும் செவ்வையாய்ச் செய்வதியல்பே அன்றோ?

இயற்கையாக அமையப் பெற்ற குடும்பத்தில் உள்ள ஒவ்வொரு குழந்தைக்கும் இயற்கைத் தாய் கற்பித்துள்ளது என்? கீழ்ப்படிதல். இக்கீழ்ப்படிதல் என்னும் சீரிய குணம் குழந்தையினிடம் இருந்து வேரூன்றுமாயின், அது தன் வாழ்நாள் முழுவதும் வெற்றி பொருந்திய வாழ்க்கையே நுகருமென்பதில் ஐயமென்ன? ஏனெனில், குடும்பத்துக்குக் கீழ்ப்-படிதல் எத்துணை வேண்டற்பாலதோ, அத்துணை இன்றியமையாதது சர்வ சமூகத்துக்கும். கீழ்ப்படித-

ளுள்ள குழந்தை இயற்கையின் கட்டளைகளையுணர்ந்து, அவற்றின்படி நடந்து குடும்பத்தை இன்பமயமாக்குகின்றது. அக்குழந்தை உற்ற வயதடைந்ததும், பல குடும்பங்கள் சேர்ந்த சமூகத்தை இன்பமயமாக்குதல் இயல்பே யன்றோ?

கீழ்ப்படிதல் குணத்தால் ஒருவன் பொறுமை, மரியாதை, அடக்கம், அன்பு, தன் கடமையுணர்ந்து செய்தல், தியாக சிந்தனை முதலிய உயர்ந்த—ஆனந்த நிலைக்குரிய குணங்களை இயற்கையாகவே பெறுகின்றான். அத்தகையோன் சுதந்தர வீரனே. சுதந்தரம் என்பது யாது? இயற்கையின் விதிப்படி நடத்தலே சுதந்தரம் எனப்படும். ஆகவே, குடும்பம் என்னும் உயரிய மாளிகை கட்ட முதற் செங்கல்லாக விளங்குவது கீழ்ப்படிதலே என்க. இதுவே சமூகப் பாதுகாப்பு என்பதையும் அறிக. சமூகப் பாதுகாப்பே நாட்டு முன்னேற்றத்துக்கு அடிப்படையானது. எனவே, கீழ்ப்படிதல் குடும்பத்துக்கும், சமூகத்துக்கும், நாட்டுக்கும் உயிர்நாடி போன்றது. ஆதலின், கீழ்ப்படிதலான மேன்மைக் குணத்தை ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் தன் உயிரினும் உயர்ந்த அணியாகக் கொள்ளல் வேண்டும்.

இரண்டாவதாகக் குழந்தை அன்பு என்பதைக் குடும்ப வாயிலாக உணர்கின்றது. அன்பு, கீழ்ப்படிதலைப் போன்ற அருங்குணமாம். அன்புடைமை ஒவ்வொரு குடும்பத்தாரிடத்தும் நனி விளங்கக் காணலாம். அன்பு இன்றேல் இன்பம் இல்லை; ஒற்றுமையில்லை; உயரிய குணங்கள் இல்லை; அன்பில்லான் வாழ்க்கை

இல்லான்; உயிரில்லான்; அவனை நடைப்பிணம் என்-னல் மிகையாகாது. ஆதலின், குடும்பம் என்னும் மரத்துக்கு ஆணி வேர் போன்ற அன்பே மக்கள் சமூகத்தையும் நாட்டையும் ஒன்றுபடுத்துவதென்பதை அறிக. மேனாட்டார் ஒற்றுமையாகவும், செல்வச் சீமான்களாகவும், நாகரிக முள்ளவராகவும், உலகத்தை ஆள்பவராகவும் விளங்கக் காரணம் யாது? அன்பே! அவர்கள் தங்கள் சமுகத்தினிடம்-ஜாதியினரிடம்-தங்-கள் நாட்டுப் பொருள்களிடம் அன்பு கொண்டுள்ளார்-கள். அன்புடைய எந்தச் சமூகமும் உயர்நிலையில் இருப்பது திண்ணம். ஆதலின், குடும்பம், அன்பு என்னும் அரிய மணத்தை உலகெலாம் பரப்பும் இன்பப் பூங்காவாகத் திகழ்கின்றது.

ஒரு குடும்பத்தினர் ஒரே கட்டடத்தில் ஒரே தலை-வரின் கீழ் (தந்தையின் கீழ்) அன்பெனும் பிணைப்பால் கட்டப்பட்டு, ஒருவர்க்கொருவர் உதவி புரிதல், அன்பைக் கனியச் செய்தல், ஒற்றுமை உடையரா யிருத்தல் என்னும் உயரிய குணங்களோடு விளங்கு-கின்றனர். ஆகவே, குடும்பம் குழந்தைகளின் பிற்கா-லச் சமூக வாழ்விற்கு வேண்டுவனவற்றை இயற்கை-யாகக் கற்பிக்கும் இன்பப் பள்ளி என்னலாம்.

ஒருவன் தன் குடும்பத்தைப் பெருமைப்படுத்த முயல்வானே அன்றி இகழ்ச்சிப்படுத்தச் சம்மதியான். அவன் உயரிய குணங்களாலும் ஒழுக்க முறைகளா-லும் தான் வளர்ந்த குடும்பத்துக்குப் புகழைத் தேடுதல் இயல்பே. அங்ஙனமே, அவன் தான் பிறந்த நாட்டுக்கும் புகழைத் தேடுதலும் இயல்பே.

ஆகவே, அன்புள்ள பிள்ளைகளே,

குடும்பம் கூறுவதேன்? அது நமக்குக் கீழ்ப்படிதல், அன்பு, அடக்கம், பொறுமை, பிழை பொறுத்தல், ஒற்றுமை, சமத்துவம் முதலான உயரிய இன்பமயமான குணங்களைக் கற்பிக்கின்றது. ஏன்? அக்குணங்களை நாம் சிறந்த ஆபரணங்களாகப் பூண்டு நமது சமூகத்துக்கு உழைக்கவே - நமது தாய் நாட்டைப் பெருமைப்படுத்தவே என்க. இங்ஙனம், இறைவனால் உண்டாக்கப்பட்ட குடும்பம் கூறும் அரிய குணங்களோடு நாம் சமூக வாழ்வில் இருப்போமாயின், சமூகம் ஒன்றுபட்டு, நாடும் நன்னிலை எய்தி, நாமும் சுக வாழ்வு வாழக் கூடுமல்லவா?

---

## 6. வாழ்க்கையின் உயர் நிலை

1. சாதி மத பேதமற்று, உயர்வு-தாழ்வு என்னும் வேறுபாடற்று, ஒழுக்க நெறியில் நடைபெறும் வாழ்க்கையே உயர் நிலை எய்தியதாகும். —**தயானந்த சரஸ்வதி**

2. சமத்துவமும், சகோதரத்வமும் கொண்டு ஒழுக்கமுள்ள வாழ்க்கை நடத்துதலே பிறப்பின் சிறந்த இலட்சியமாகும். —**காந்தியடிகள்**

இந்தியாவில் மிக்கிருந்த மூடப் பழக்க வழக்கங்களைக் கண்டித்து, மக்களுக்குள் சமத்துவம்-சகோதரத்வம்—கல்வி அறிவு, ஒழுக்க நெறி இவற்றை உண்டாக்கி மறைந்த பெரியார்களுள் தயானந்த சரஸ்வதி ஒருவராவர். அவர் அந்தணர் குலத்திற் பிறந்தவர். அவர் சிறுவராக இருக்கையில் சிவராத்திரியன்று கண் விழிக்-

கத் தந்தையோடு சிவன் கோவிலை அடைந்தார். அங்-குப் பன்னிரண்டு மணி வரையில் பக்தர் பலர் விழித்திருந்து பிரார்த்தனை செய்துகொண்டிருந்து தம்மை அறியாமலே தூக்கத்தில் ஆழ்ந்தனர். சிறுவர் தயானந்தர் ஒருவரே விழித்துக்கொண்டிருந்தார்.

அவ்வமயம் ஒரு சிற்றெலி சிவலிங்கத்தின் எதிரில் இருந்த பழம் - தேங்காய்களை எல்லாம் தின்றுவிட்டுச் சிவலிங்கத்தின் முடி முதலான பாகங்களில் ஏறி விளை-யாடி மறைந்தது. அதைக் கண்ட சிறுவர் மன மயக்-கம் கொண்டார்; சிற்றெலியின் செய்கையைப் பற்-றித் தீவிரமாகச் சிந்திக்கலானார்; முடிவில், "இச்சிவ-லிங்கம் உண்மைக் கடவுளாயின், சிற்றெலி இங்ஙனம் விளையாடி இருக்குமா? இச்சிவலிங்கத்துக்கும் கடவு-ளுக்கும் உண்மையாகவே ஏதேனும் சம்பந்தம் உண்டா? இல்லையா? இவ்வுண்மையைக் கண்டறிதல் வேண்டும்,'' என்ற முடிவுக்கு வந்தார்; உடனே தந்-தையை எழுப்பித் தாம் வீடு செல்வதாகக் கூறி, இல்-லத்தை அடைந்தார்.

நாட்கள் பல சென்றன. எனினும், தயானந்தர் (இயற் பெயர்: மூல சங்கரன்) எலியின் செய்கையை மறந்திலர். அந்நிலையில் அவர் உடன் பிறந்தாளும் மாமனும் மண்ணுலக வாழ்வை நீத்தமை கண்டு வருந்-தினர். மைந்தன் மன மாற்றத்தைக் கண்ட பெற்றோர் அவருக்குத் திருமணஞ் செய்விக்க முயன்றனர். அதனை உணர்ந்த தயானந்தர், "இனி இங்கிருப்பின், நமது பிரமசரியத்துக்குக் கேடுண்டாகும்,'' என்று நினைத்து, தம் பெற்றோரையும் உல்லாச இல்லற

வாழ்க்கையையும் துறந்து வெளிப்பட்டார். தாம் அணிந்திருந்த விலை உயர்ந்த அணிகளை ஏழை மக்கட்குக் கொடுத்து ஊர் ஊராகச் சுற்றி, 'வாழ்க்கையின் உயர் நிலை எது? அதைக் காண்பேன்,' எனக் கூறி அலைந்தார். பெற்றோர் அவரைக் கண்டு பிடித்து வீடு வருமாறு எத்துணை வேண்டியும், பயனில்லாது போயிற்று.

தயானந்தர் இமயமலை, விந்தமலை—கங்கை முதலான நதிகள் பாயும் புண்ணிய நகரங்கள், கிராமங்கள், காடுகள் முதலான இடங்கள் எல்லாம் சுற்றித் திரிந்து, பல பெருமக்களை அடைந்து வடமொழியில் திப்பிய புலமை சான்ற பேரறிஞராகி, ஒரு பெரியாரிடம் தீட்சையைப் பெற்று, தம் இருபத்து நான்காம் வயதில் ஸ்ரீ தயானந்த சரஸ்வதி என்னும் துறவி நாமத்தைப் பெற்றார்.

பின்னர், தயானந்தர் பல இடங்கட்குச் சென்று, ஆங்காங்கிருந்த பெரியார்களிடம் யோக சாத்திரப் பயிற்சி பெற்று, முடிவில் யமுனைக் கரையில் இருந்த விரஜானந்த சுவாமிகள் என்பாரை அடுத்து வேதம், பாஷ்யம் முதலியவற்றைக் கற்றுச் சாத்திரப் பேரறிஞரானார். விரஜானந்த சுவாமிகள் தயானந்தரை நோக்கி, "அன்பனே, எனக்குக் குரு தட்சணையாக நீ தரத்தக்கது ஒன்றுளது. அஃதியாதெனின், தற்போது நமது தாய் நாட்டில் மலிந்துள்ள மூடப் பழக்க வழக்கங்களையும் குருட்டுச் சடங்கு ஆசாரங்களையும் மக்கள் மனத்தினின்றும் வேரோடு களைந்து, அவர்கள் கடைத்தேறுமாறு சமத்துவம், சகோதரத்வம், ஒழுக்-

கம் இவற்றை உணர்த்தும் வேத தருமத்தைப் போதிக்கவும். அதுவே வாழ்க்கையின் உயர் நிலை. இத்தொண்டே எனக்குகந்த காணிக்கையாகும்,'' எனக் கூறினர்.

தயானந்தர் அகமும் முகமும் மலர அடிகளைப் பணிந்து அங்ஙனமே செய்வதாகக் கூறிப் புறப்பட்டார்; வட இந்தியா முழுவதுஞ் சுற்றிப் புராணப் புரட்டுகளை-யும்,மதத்தின் பெயரால் சுயநலக்காரர் செய்யும் பொய்-யான சடங்குகளையும் ஆசாரங்களையும், பிற கொடிய செயல்களையும் பாமர மக்கள் உட்பட யாவர்க்கும் வெளிப்படுத்தி, நாட்டில் புத்துணர்ச்சியை உண்டாக்கி-னர். "வேதத்தை அனைவரும் படித்தறியலாம். சமத்-துவத்தையும் சம தர்மத்தையும் புகட்டுவதே வேத-மாகும். வேத தருமத்தில் விக்கிரக ஆராதனை இல்லை. எங்கும் நிறைந்துள்ள ஆண்டவனை எங்கும் எந்நேரத்-திலும் வழிபடலாம். அன்பு கனிந்த அப்பெருமானால் படைக்கப்பட்டோர் யாவரும் ஒரு குலத்தினரே. அவர்-களுக்குள் உயர்வில்லை-தாழ்வில்லை; இது முக்காலும் சத்தியம்!'' என முழக்கஞ் செய்தார்.

மேலும் அப்பெரியார், "சமூகம் முன்னேற்ற-மடைய வேண்டும்; சிறுவர் சிறுமியர்க்கு ஆரம்பக் கல்வி அவசியமானது. குருகுலங்கள் இன்றியமையாதவை; அநாதை ஸ்தாபனங்கள், கன்னிகா ஸ்தாபனங்கள் முதலியவை நாடெங்கும் தாபிக்கப்படல் வேண்டும்; வேதம் பிரசாரமாதல் வேண்டும்; வேத உட்பொருளை யாவரும் அறியும்வகை செய்தல் வேண்டும்; சத்தியம் ஒன்றுக்கே அஞ்சவும்; பிறிதொன்றுக்கும் அஞ்ச

வேண்டா," என, ஊரூராய்த் திரிந்து பிரசாரம் செய்து வந்தார். அவரது அரிய உபதேசம் பாமர மக்கள் மனத்திலும் பசுமரத்தாணி போலப் பதிந்து பெரு நன்மை பயக்கியது. மக்கள் தங்கள் மூடப் பழக்க வழக்கங்களை நினைந்து வருந்தி, அவற்றைக் கைவிட-லாயினர். எனவே, மூடப் பழக்க வழக்கங்களால் நிகழும் சடங்குகளாற் பிழைத்து வந்த சுயநலக்காரர் தெருவில் விடப்பட்டனர். அச்சுயநலப் பேதைகள் தயானந்தர்மீது அளவிலாச் சீற்றங்கொண்டு, அவ-ரது ஆருயிர்க்கு உலை வைத்தனர்; அவர் உணவில் விஷத்தை வைத்துவிட்டனர். அவ்வளவே : விஷம் கலந்த உணவையுண்ட அடிகள் துறக்கம் எய்தினர்.

ஆ! உலகம் உய்யுமாறு நன்மை செய்யத் தம் சுக போகங்களை வெறுத்துக் கிளம்பிய தயானந்தருக்கு இச்சுயநலக்காரரால் நேர்ந்த விபத்தென்ன! அன்புள்ள பிள்ளைகளே, இங்ஙனமே, இயேசுநாதர் சுயநலக்காரரால் சிலுவையில் அறையப்பட்டார்; சாக்ரடிஸ் விஷமூட்டிக் கொல்லப்பட்டார். உலகத்தை உய்விக்கத் தோன்றிய இப்பெரியார்கட்கு இத்தகைய முடிவா ஏற்படல் வேண்டும் ?

---

## 7. ஆந்திர நாட்டை ஆழ்ந்து நோக்குக.

1. இன்று இந்தியாவில் சிறப்புற்றுள்ள மொழிகளில் தெலுங்கு இரண்டாவதாகக் கூறப்படுகிறது. இதற்குத் தெலுங்கரது மொழிப்பற்றும் ஒத்துழைப்புமேகாரணமாகும்.

—சி. ஆர். ரெட்டி

2. தெலுங்கு மொழியில் சுதந்தரமான சரித்திர நூல்களும், ஆராய்ச்சி நூல்களும், அறிவு நூல்களும் கணக்கற்று வெளி வருகின்றன. ஆங்கிலமும் தெலுங்கும் ஒருங்கே கற்ற ஆடவர் - பெண்டிரே இம்மொழி வளர்ச்சிக்குக் காரணர் ஆவர்.

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

ஆந்திர நாடு தெலுங்கு பேசப்படும் நாடாகும். சென்னைக்கு வடக்கிலும் வடமேற்கிலும் உள்ள சில்லாக்கள் யாவும் ஆந்திர நாட்டைச் சேர்ந்தவையே. அந்நாட்டுச் சனத்தொகை ஏறக்குறைய இரண்டு கோடியே இருபது லட்சமாகும். ஆந்திர மொழி, தமிழ் மொழியிலிருந்தே தோன்றியதெனத் தமிழர் பாடிக்கொண்டிருக்கின்றனரேயன்றித் தம் தாய் மொழியான தமிழை எவ்விதத்தும் வளர்த்தவராகக் காணப்படவில்லை. நம் தமிழர் மிகப் பழைய காலத்தைப் பற்றியே இன்னும் பேசி வருகின்றனரே அன்றித் தற்போது செய்வதொன்றும் இல்லை. ஆனால், இன்று ஆந்திர மொழி எவ்வாறு அபிவிருத்தி அடைந்துள்ளது? அதற்குக் காரணம் என்ன? என்பனவற்றுக்கு விடை காண்போம்:

நூல் வளப்பமும், நுண்பொருள் விளக்கமும், மக்கட் பெருக்கமும், செல்வப் பெருக்கும், உலக அறிவும் ஒருங்கே பெற்றுள்ள மொழியே சிறப்புடையது. இம்முறையில் இன்று நம் தாய் நாட்டில் தலைமையுற்று விளங்குவது வங்கமொழி; இரண்டாவது ஆந்திரமொழி. நம் தமிழரைப் போலத் தம் மொழியின் பழமையையும் பெருமையையும் பேசிக்கொண்டு வாளாவிராமல், இக்காலத்தில் எவ்வெவ் வகையில் தம் மொழியும்

தாமும் முன்னேற வேண்டுமென்பதைச் சிந்தித்து அவ்வவ் வகைகளில் ஊக்கங் குன்றமல் வேலைசெய்து வருதலே அவரும் அவர்தம் மொழியும் முன்னேற்ற மடைதற்குக் காரணமாகும். பழமையான நூல் என்ற உடனே இரு கண்களையும் மூடிக்கொண்டு அதனைத் தலைமீது வைத்து வணங்கும் தமிழர்க்கும், பழைய நூலை ஆராய்ந்து, குற்றங்களைக் கடிந்து குணத்தைக் கொள்ளும் ஆந்திரர்க்கும் உள்ள மன மாற்றத்தை நோக்குங்கள்!

பழைய ஏட்டுச் சுவடிகளைத் தேடிப் பிடித்து ஆராய்ந்து நூல்களாக வெளிப்படுத்துவதில் ஆந்திரர் மிக்க ஊக்கங் காட்டி உழைக்கின்றனர். தம் மொழியின் வரலாற்றையும் நாட்டு வரலாற்றையும் உள்ளவாறு ஆராய்ச்சி செய்து வெளியிடப் பல கழகங்கள் இன்று வேலை செய்து வருகின்றன. பழஞ் சுவடிகள் நிறைந்த புத்தகாலயமும் ஆந்திர நாட்டில் விளங்குகின்றது. ஆங்கிலத்தில் உள்ள 'என்சைக்கிலோபீடியா ஆப் பிரிட்டானிகா' என்னும் விரிந்த நூலைப் போன்றே 'ஆந்திர விஞ்ஞான சர்வஸ்வம்' என்னும் மிக விரிந்த ஒரு நூலைத் தம் மொழியில் எழுதி வருகின்றனர் எனின், ஆந்திரர்தம் மொழிப்பற்றை என்னெனப் புகழ்வோம்!

எண்ணிறந்த ஆங்கிலப் பட்டதாரிகள் ஆடவர்—பெண்டிர் அனைவரும் தாய்மொழியே பேசித் தாய்மொழியில் வெளிவரும் பத்திரிகைகளையே வாசிக்கின்றனர். நம் தமிழ் நாட்டிலோ எனின், இரண்டாவது பாரம் படித்தவர் பெருமிதங் கொண்டு தமக்குச் சிறிதும்

விளங்காத ஆங்கிலப் பத்திரிகையைக் கையில் எடுப்பது சர்வ சாதாரணமாக இருக்கிறது. தமிழ்ப் பத்திரிகை படிப்பது கேவலம் எனக் கருதும் தமிழர் எங்ஙனம் முன்னேறுவர்? தமிழ்மொழி யாங்ஙனம் அபிவிருத்தி அடையும் ?

எண்ணிறந்த ஆங்கில நூல்கள் தெலுங்கு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. நவீன விஞ்ஞான ஆராய்ச்சிகளைப் பற்றிய நூல்கள் பல வெளி வந்துள்ளன. பேரறிஞர் பலர் நூதனமாக அரிய பெரிய காப்பியங்கள் இயற்றியுள்ளனர்; இன்றும் இயற்றி வருகின்றனர். சுருங்கக் கூறின், கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்றவாறு புதிய—புதிய நூல்கள் தெலுங்கில் வெளிப்படுத்தப்படுகின்றன. ஆங்கிலத்திலும் தெலுங்கிலும் திப்பிய புலமை சான்ற பெரு மக்களான சி. ஆர் ரெட்டி எம். ஏ. அவர்களும், கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு அவர்களும் தெலுங்கு மொழியின் முன்னேற்றத்துக்குப் பெருங்காரண கர்த்தர்கள் எனக் கூறலாம். அவ்விருவரும் பல அரிய பெரிய நூல்களை இயற்றியுள்ளனர். வீரேசலிங்கம் பந்துலு, நாட்டில் மலிந்து கிடந்த மூடப் பழக்க வழக்கங்களையும், சமூக வேறுபாடுகளையும் வன்மையாகக் கண்டித்துப் பேசிய சொற்களும் எழுதிய எழுத்துக்களும் ஒவ்வோர் ஆந்திரவாசியின் உள்ளத்திலும் உறைந்து கிடக்கின்றன.

ஆந்திர நாட்டுச் சமீன்தாரர்கள் மொழிப்பற்று உடையவர்கள். அவர்கள் ஆதரவில் பல சங்கங்கள் நடைபெறுகின்றன. அச்சங்கங்கள் தக்காரைக்

கொண்டு அரிய நூல்களை எழுதுவித்து வெளிப்படுத்து-கின்றன; பத்திரிகைகளை நடத்துகின்றன. பெண் மக்கள் பெருவாரியாகக் கல்வி கற்று, மொழிப்பற்று மிகுந்து, பல பத்திரிகைகளையும் நூல்களையும் எழுதி வெளியிட்டு வருகின்றனர்.

தினசரி, வார, வாரம் இருமுறைப் பத்திரிகைகள் ஆந்திர நாட்டில் மிக்குள்ளன. ஏழை முதல் பணக்காரர் ஈருகப் பெரும்பாலான ஆந்திர மக்கள் பத்திரிகைகளை வாசிக்கிறார்கள்; நாட்டு நிலையையும் மொழியினது உண்மை நிலையையும் உள்ளவாறு உணர்கிறார்கள்; தங்களால் இயன்றவரை நாட்டு நலத்துக்கும் மொழி வளர்ச்சிக்கும், உடல், பொருள், ஆவி மூன்றையும் அளிக்கின்றார்கள். தபால் வசதியற்ற குக்கிராமங்களி-லிருந்தும் பல பத்திரிகைகள் வெளி வருகின்றன எனின், ஆந்திர மக்களின் மொழிப்பற்றை என்-னென்பது!

ஆந்திர நாட்டில் இன்று பல புத்தக நிலையங்களும் வாசக சாலைகளும் நிறைந்துள்ளன; முந்நூறுக்கு மேற்பட்ட புத்தக நிலையங்களையும் வாசக சாலைகளையும் அங்குக் காணலாம். பொதுவாகப் புத்தக நிலையம் இல்லாத நகரமே ஆந்திர நாட்டில் இல்லையெனக் கூறல் தவறன்று. சில புத்தகாலயங்கள், கிராமவாசிகள் நன்மைக்காகக் கிராமங்கள் தோறும் சுற்றி வருகின்றன என்றால், ஆந்திர மக்கள்தம் தாய் மொழிப் பற்றை என்னென்பது!

ஒவ்வோர் ஆண்டிலும் மொழி மஹாநாடுகளும், பிரசுர மஹாநாடுகளும், பத்திரிகாசிரியர் மஹாநாடு-

களும், புத்தக நிலய மஹாநாடுகளும் கூட்டப்பெறுகின்றன.

இங்ஙனம் இவ் வாந்திரர் மொழிப்பற்றுக் கொண்டு மிக உழைத்ததன் பயனுய்த் தமக்கெனத் தனி மாகாணத்தை வகுக்க முயன்று வருகின்றனர்; மொழி வளர்ச்சிக்கென ஆந்திரச் சர்வகலாசாலே (Andhra University) ஒன்றையும் தாபித்துக்கொண்டனர். அன்புள்ள தமிழ்ப் பிள்ளேகளே, ஆந்திர நாட்டு அபிவிருத்தியை ஆழ்ந்து நோக்குங்கள்: நம் தமிழ்நாட்டுக் கேவல நிலேயையும், தமிழ்த்தாய் அலமறுதலேயும் கவனியுங்கள்: ஆந்திர மொழியைப் போலத் தமிழ்மொழியும் வளர்ச்சியுற வேண்டுமாயின், அவர்களேப் போலத் தமிழ் மக்களும் உழைத்தல் வேண்டும். மாணவர்களான நீங்கள் தமிழைப் பிழையறப் பயிலல்வேண்டும்; ஏழை மக்களுக்குக் கல்வி கற்பித்தல் வேண்டும்; பொது மக்கள் தமிழறிவைப் பெற்றுத் தமிழ் மொழி வளர்ச்சியுறத் தக்க தொண்டில் நீங்கள் இறங்குதல் வேண்டும். உங்களாற்ருன் நமது நாடு—நமது தாய்மொழி பெருமையுறல் வேண்டும்.

---

## 8. சொன் மாலே

1. தன்னம்பிக்கை இருந்தால், மீட்சி உண்டு.

—விவேகானந்த அடிகள்

2. உனது அறிவை விருத்தி செய் ; உன் தீர்மானத்தில் நம்பிக்கை வை. அதுவே உன் நண்பனுக இருக்கட்டும்; நீ முன்னேற்றமடைவாய்.

—டாக்டர் மாடேர்ன்

3. காலத்தின் விலையை அறிந்துகொள். காலமே உன் உயிர். அதை வீணாக்குவது உன்னை நீயே கொலை செய்துகொள்வதைப் போலாம்.

—சார்ல்ஸ் வாக்னர்

4. உலகமெங்கும் நிறைந்திலங்கும் பொருளைத்-தரிசிக்க விரும்பின், ஒருவன் மக்கட் படைப்பில் மிகக் கடையானவனிடத்தும் அன்பு செலுத்தக் கூடியவனா யிருத்தல் வேண்டும்.

—காந்தியடிகள்

5. நமது தினசரி வாழ்வில் சாதி, மத, சமூகப் பாகு பாடுகளை உறுத்திக் காட்டும் எச் செயலையும் செய்யலாகாது. யாவரும் ஒரே குடும்பத்தினராயிருத்-தல் வேண்டும்.

—சரோஜனி தேவியார்

6. இந்தியர் கோழைகள் அல்லர்; தாழ்ந்தவர் அல்லர்; எங்கள் முன்னோர் நாகரிகம் அற்றிருந்த காலத்தில் இந்தியா பொன்னாடாக விளங்கியது; இந்தியர் தேவர்களாக விளங்கினர்; இந்தியா செல்-வத்தைப் பொழிந்துகொண்டிருந்தது.

—எட்மண்ட் பர்க்

7. எனது தாய் நாட்டிற் பிறந்த எறும்பும் என் சகோதரனே. அதன் இன்ப துன்பங்கள் எனக்கு நேரும் இன்ப துன்பங்களேயாகும்.

—விவேகானந்த அடிகள்

9. செல்வம், அழகு, உண்மை, தூய்மை முதலியவற்றால் நிறைந்து பூலோக சுவர்க்கம் எனக்-

கொண்டாடத் தக்க நாடு எதுவென்று என்னைக் கேட்-பின், இந்தியா என்று யான் சுட்டிக் காட்டுவேன்.

—மாக்ஸ் முல்லர்

## 9. அன்னி பெசன்ட் அம்மையார்

1. இந்தியாவின் உண்மைத் தோழர்களில் டாக்-டர் அன்னி பெசன்ட் அம்மையார் ஒருவராவர். அவர் இந்தியாவுக்குச் செய்துள்ள தொண்டுகள் மிகப் பல.

2. அன்னி பெசன்ட் அம்மையாரால் நேர்மை-யான மதவுணர்ச்சியும், பிரம ஞானமும் இந்திய மக்-களுக்கு உண்டாக வழியேற்பட்டது.

—மதன் மோகன் மாளவியா

டாக்டர் அன்னிபெசன்ட் அம்மையார் அயர்-லாந்து மாதுக்கும் ஆங்கிலேயர் ஒருவருக்கும் பிறந்த-வர். இவர் இங்கிலாந்தில் எப். ஏ. பரீட்சையில் தேறி-யதும், மத குரு ஒருவரை மணந்து இல்லறத்தை நடத்தி வந்தார். இவருக்கு ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. சிறிது காலம் கழிந்த பின்னர்க் கணவர் செய்து வந்த கொடுமைக-ளைச் சகிக்கமாட்டாமல், இவர், வீட்டைவிட்டு வெளி-யேறினர்.

பின்னர், இவர் ஆங்கிலப் பத்திரிகைகளில் அரிய கட்டுரைகளை எழுதி வெளியிட்டு வந்தார்; அக்காலங்-களில் அரிய பிரசங்கங்கள் பல செய்து ஆங்கில மக்-களின் பெரு மதிப்புக்கு இலக்காயினர். ஆங்கிலப் பேராசிரியரான பேர்னார்ட்ஷா என்போரின் நட்பும் இவருக்குக் கிடைத்தது.

இதன் பின்னர், இவர் ஆவி உலக ஆராய்ச்சிகளில் கவனஞ் செலுத்தினர்; ப்ளாவட்ஸ்கி என்னும் ஆங்கில மாது எழுதியுள்ள பிரம ஞான நூலைப் படித்தார்; அத-னிடம் அளவிலாப் பற்றுக் கொண்டார்; 1907-ஆம் ஆண்டு முதல் 1933-ஆம் ஆண்டுவரை உலகப் பிரம ஞான சங்கத்துக்கு (Theosophical Society) இவரே தலைவராக இருந்து வந்தார். பதினொரு நாடுகளில் பரவி இருந்த பிரம ஞான சங்கங்கள் இவரது அளப்பரிய முயற்சியால் எல்லாத் தேசங்களிலும் ஏற்படுத்தப்பட்-டன. இங்ஙனம், பிரம ஞானத்தை உலகெலாம் பரப்பிய பெருமை இம்மாதரசியாருக்கே உரியது.

இங்ஙனம் மேனாடுகளில் தொண்டு செய்த இவ்-வம்மையார் 1893-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 16-ஆந் தேதி முதன் முதலாக நமது தாய் நாட்டுக்கு வந்தார். இவருக்கு இந்தியாவின் எம்மொழியும் தெரியாதிருந்-தும், வந்த உடனே இந்தியாவின் பண்டைப் பெருமை-களையும், வேதங்களின் உயர்வுகளையும் — தற்காலச் சிறுமைகளையும் மிகத் தெளிவாகக் கூறக் கேட்ட இந்-தியர் இவர்பால் ஆச்சரியமும் அன்பும் களிப்புங் கொண்டனர். அன்னியப் பெண்மணியான இவர் நமது நாட்டினிடம் கொண்ட பக்தியைக் கண்ட நம் மக்கள் கண்ணீர் உகுத்து, இவரிடம் பேரன்பு கொண்-டனர்; இவரை அவதார மாதரசியார் எனக் கொண்-டாடவும் முன் வந்தனர்.

நமது நாட்டில் பொது ஸ்தாபனங்கள் ஏற்படுத்து-வதிலும், பொதுத் தொண்டுகளைச் செய்வதிலும் இவ்-வம்மையார் மிக உழைத்து வந்தனர். இந்திய சாரணர்

இயக்கத்தை இந்நாட்டில் முதன் முதல் தோற்றுவித்த பெருமை இப்பெரியாருக்கே உரித்தானது. பாலிய மணத்தை ஒழிக்கவும், பெண் கல்வியைப் பரப்பவும், பிற சீர்திருத்தங்களைச் செய்யவும் பெசன்ட் அம்மையார் அரும்பாடு பட்டார் என்பதை ஒருவரும் மறக்க முடியாது.

தாய் நாட்டின் மீது அளவிலாப் பற்றை இந்தியருக்கு ஊட்டியவர் இவரே யாவர். நேர்மையான மத உணர்ச்சி ஊற்றெடுத்துப் பெருகும்படி இவர் செய்த சொற்பொழிவுகள் இன்றும் இந்திய மக்களின் உள்ளங்களில் உறைந்து, செவிகளில் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. பிறரைப் பேச்சால் வசீகரிக்கும் ஆற்றல் பெற்ற இவரால் சென்னையை அடுத்துள்ள அடையாற்றங் கரையில் பிரம ஞான சங்கம் தாபிக்கப்பட்டுள்ளது. இவரால் ஏற்படுத்தப் பெற்ற இச்சங்கத்தில் பேரறிஞர் பலர் அங்கத்தினராக இருந்து வருகின்றனர். அவர்கள் தியாசபிஸ்ட்ஸ் (Theosophists) எனப்படுவர். பிரம ஞானத்தைப் பற்றிப் பெசன்ட் அம்மையார் பல அரிய ஆராய்ச்சி நூல்களை வெளிப்படுத்தி உள்ளார்.

இவர் மிகப் பிடிவாத குணம் உடையவர். எவ்விதமான அநீதியையும் எதிர்த்துப் போராடுவதே இவரது லட்சியமாக இருந்து வந்தமை குறிப்பிடத்தக்கது. பாரத நாட்டைத் தம் தாய் நாடென மதித்து, பாரத மக்களைத் தம் சோதர சோதரிகள் என மதித்து இவர் செய்துள்ள சேவைகளை இந்தியா ஒரு நாளும் மறவாது! மறவாது!!

'என் கடன் பணி செய்து கிடப்பதே.' —நாவுக்கரசர்

# 10. அடக்கம் உடைமை

1. உன் சொந்த வேலை எதுவாயினுஞ் சரி; அதைச் செய்ய நீ சிறிதும் வெட்கப்படலாகாது.

—ஈஸ்வர சந்திர வித்தியா சாகரர்

2. மாணவர் தம் பொருள்களைத் தாமே எடுத்துச் செல்லலாம். இதில் அகௌரவம் ஒன்றும் இல்லை.

—சர். பி. சி. ரே

அடக்கம் என்பது மனம், வாக்கு, காயம், என்னும் முக்கரணங்களையும் தீய வழியில் விடாமல் ஒருவன் அடக்கியாளுதல் என்பது பொருள். இது பிறர் குற்றம் போலத் தனது குற்றம் காணும் நடுவு நிலைமை உடையவனுக்கு உரித்தானது. மக்களாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் அடக்கமுடைமை இன்றியமையாதது. அஃது ஒருவனைத் தேவருலகத்தில் கொண்டுபோய் விடும். அடக்கமில்லாதவனை அடங்காமை என்னும் பேய் பொறுத்தற்கரிய நரகத்தில் செலுத்திவிடும். இதனையே நாயனார்,

"அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும்" என்று கூறியுள்ளார். ஆதலின், ஒவ்வொருவரும் அடக்கத்தை உறுதிப்பொருளாகக் கொண்டு காக்கக் கடவர். உயிர்க்கு அதனினும் மேற்பட்ட செல்வமானது வேறு கிடையாது. அடங்குதலே நமக்கு அறிவாவதென்றறிந்து ஒவ்வொருவரும் நல்வழியில் அடங்கப்பெறல் வேண்டும்.

நாம், புலன்களை அடக்குதல் மிகச் சிறந்தது; இரண்டாவதாக நாவை அடக்குதல் வேண்டும்; மூன-

றுவதாகப் போறுமை உடையராய் இருத்தல் வேண்டும்; தமக்கு ஒப்பல்லார் தாழ்வானவைகளைக் கூறினும், அவற்றைப் பொறுத்துக்கொள்ளுதல் பொறுமை-யாகும். வேறுபாடின்றி இருவர் கலந்து சிநேகம் செய்-தால், அவ்விருவரில் ஒருவனிடத்து நன்னடக்கையின்-றேல், மற்றவன் அதனைப் பொறுத்தல் வேண்டும்; பொறாவிடின், அவனைத் தூற்றாமல் அவனது நட்பை விடுதலே மேன்மையானது. தான் கெடினும் பிறர்க்குக் கேடு செய்யாமலும், அன்பற்றவர் வீட்டில் உண்ணா-மலும் உலகமெல்லாம் பெறினும் பொய் சொல்லா-மலும் இருத்தல் மேன்மைக் குணங்களாகும். இத்த-கைய சிறந்த குணங்கள் யாவும் புலன்களை அடக்கு-வோருக்கு ஏற்படுவனவாம்.

நான்காவதாக நாம் பிழை பொறுத்தலான மேன்-மைக் குணம் உடையராயிருத்தல் வேண்டும். நாம் நோகப் பிறர் இழைத்த சிறு பிழைகளைப் பொருட்-படுத்தாமல் அவற்றை மறப்பதே நன்று; அவ்வாறு மறவாமல் தீங்குக்குத் தீங்கு இழைப்போமானல், தீங்கு செய்தோரினும் நாம் இழிந்தவரே ஆவோம்.

அறிவீனரும், அகந்தை உடையவரும், வீண் வாதஞ் செய்பவரும் ஆகிய பலவிதத் துட்டர்களைச்சந்-திக்கும்படி நேரிடின், அப்பொழுது அவர்கள் குற்றங் குறைகள் நம்மிடத்திற் சிறிதும் அணுக விடாமல், நம்முடைய பேச்சையும் நடத்தையையும் கவனமாய்க் காத்து அடக்கிக்கொள்ளல் வேண்டும். பேசும்பொழுத் மிதமிஞ்சின ஆவல், அவசரம், கூச்சல், கொடுமை இவற்றிற்கு இடந் தரலாகாது. பிறர் பேசும்போத்

இடையிடையே நாமும் போய்க் குறுக்கிடாமல் அடங்கி இருத்தல் வேண்டும். ஒருவர்க்கு மானக் கேடான பேச்சுகளை ஒரு போதும் பேசலாகாது. பெரியோர் மொழிகளை எடுத்து ஏளனம் செய்யக் கூடாது.

நிலையற்ற உலக இன்பங்களையே பெரிதும் கருதாமல் புலன்களைத் தன் வசப்படுத்தி, இறைவனின் அருளுக்குப் பாத்திரராகுமாறு பாடுபடல் வேண்டும். இறைவனின் அருளே நமது பிறவி நோய்க்கு ஏற்ற மருந்தாகும். அது, புல்லறிவைப் போக்கி நல்லறிவை ஊட்டும்; அறியாமையை அகற்றி அறிவை ஊட்டும். இறைவன் அருள் வாய்க்கப் பெற்றால், அறிவாகிய விளக்குச் சுடர்விட்டெரியும். அப்பொழுதே நாம் இறைவனைக் காணலாகும். "கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்கள் இடத்திலே" என்று தாயுமானவர் கூறிய வண்ணம், கருவி கரணங்களை மாய்த்து அடக்கமுடைமையை மேற்கொண்ட பேரறிவாளரிடத்தே கடவுள் அருள் சுரந்துள்ளார் என்பது ஒருதலை. பின்னும் அடக்கமுடைமையை நன்கு விளக்க உண்மையில் நிகழ்ந்த ஒரு வரலாற்றினை ஈண்டுக் கூறுவோம்:

வங்காள நாட்டில் சில ஆண்டுகட்கு முன்னர் ஈஸ்வர சந்திர வித்தியா சாகரர் என்ற பேரறிவாளர் ஒருவர் இருந்தார். அவர் அடக்கமே அணியாகக் கொண்டவர். ஒரு சமயம் அவர் கல்கத்தாவிலிருந்து மிட்னபூர் என்னும் பதிக்குப் புகைவண்டியில் பிரயாணம் செய்தார். அப்பொழுது அவர் வீற்றிருந்த வண்டியில் கல்லூரி மாணவன் ஒருவன் இருந்தான்.

அவன் தற்புகழ்ச்சி, வீண் டம்பம் முதலியவைகளில் ஆர்வமுடையவன். ஈஸ்வர சந்திரர் சாமானிய உடை- யில் இருந்ததால், அவரை அவன் சிறிதும் மதிக்கவில்லை. ஈஸ்வர சந்திரர் அவனது செருக்கைக் கண்டு அவனது அறியாமைக்குப் பெரிதும் இரங்கினர். இருவரும் மிட்னபூரில் இறங்கினர். மாணவன் தான் கொணர்ந்த ஒரு சிறிய பெட்டியைத் தூக்க ஆள் வேண்டுமென்று கூவினன்; ஒருவரும் வரவில்லை. இதனைக் கவனித்- துக்கொண்டு அருகே நின்ற ஈஸ்வர சந்திரர் தாம் அந்தப் பெட்டியைச் சுமந்து வருவதாக அம்மாணவ- னிடம் கூற, அவனும் இசைந்தனன். பின்னர் இருவரும் மாணவன் வீடு சென்றனர். அவன் அவருக்குக் கூலி- யாக நான்கணு கொடுக்க வந்தனன். அவர் அதனை வாங்க மறுத்துவிட்டுத் தம் வீட்டை அடைந்தார்.

மறுநாள் ஈஸ்வர சந்திரரைப் பெருமைப்படுத்தப் பெருவிருந்து ஒன்று நடந்தது. அவ்விருந்துக்கு மாண- வனும் வந்திருந்தான். அவன், முதல் நாள் தனது பெட்டியைச் சுமந்து வந்தவரே கல்வியிற் சிறந்த ஈஸ்வர சந்திரர் என்பதையும், அவருக்கே பெரு விருந்து நடக்கிறதென்பதையும் அறிந்தான். அறிந்த- தும், அவன் தனது செருக்கை எண்ணி எண்ணி வெட்கமடைந்தான். அப்பெரியாரது அடக்க ஒடுக்- கத்தை நினைக்க நினைக்க அவனிடத்தில் நிலைபெற்- றிருந்த துர்க்குணங்கள் அனைத்தும் பஞ்சாய்ப் பறந்- தன. தனது உடல் நடுங்க அன்பு நிறைந்த மனத்துட- னும் பய பக்தியுடனும் அப்பெரியாரின் அடிகளில் தன் முடிபட வீழ்ந்து வணங்கித் தன்னை மன்னிக்கும்-

படி மன்றாடி வேண்டினான். அவர் அவனை அக்கணமே மன்னித்து அவன்பால் அன்புகொண்டு, அவனுக்குப் பல நற்புத்திகளைக் கூறி அகன்றார்.

பிள்ளைகளே, நீங்கள் ஈஸ்வர சந்திரரைப் போல இருக்க விரும்புகிறீர்களா? மாணவனைப் போல இருக்க விரும்புகிறீர்களா?

---

## 11. என் கடன் பணி செய்வதே

1. பகுத்தறிவுக் கொவ்வாக் கொள்கைகள் நிறைந்த பழைய துருக்கியைப் பெண்களுக்கு உரிமையளித்து நவீன துருக்கியாக மாற்றிய பெருமை துருக்கித் தலைவர் முஸ்தபா கெமால் பாட்சாவுக்கே உரியது.

—கே. குநக்கர்

2. துருக்கிப் பெண்கள் சுதந்தர மங்கையராக விளங்குதல் தேவ மகளிர் வாழ்க்கையை ஒத்துள்ளது.

—இரவீந்திர நாத தாகூர்

'என் கடன் பணி செய்வதே' என்று நாவுக்கரசர் நவின்ற நல்லுரையைத் தம் பெரு விரதமாகக் கொண்டுள்ள துருக்கித் தலைவர் முஸ்தபா கெமால் பாட்சா, பழைய துருக்கியை நவீன துருக்கியாக மாற்றி இருப்பது சிறந்த சேவையாகும். அவர் செய்துள்ள பல சீர்திருத்தங்களுள் துருக்கிப் பெண்களுக்காகச் செய்த சீர்திருத்தத்தையே உலகெலாம் புகழ்கின்றது.

அவருக்கு முன் இருந்த சுல்தான்கள் காலத்தில், துருக்கிப் பெண்கள் முக்காடிட்டுக் கோஷா வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். அவர்களைப் பொது இடங்களிலும் தெருக்களிலும் வீட்டு வாயிற்படிகளிலும்

காண்பது அரிது. ஓரோவழி வெளி வரினும் கனத்த முக மூடியை அணிந்திருப்பர். அவர்களுக்கு உலக நடவடிக்கைகள் தெரிய வழியில்லை; பிற நாட்டுப் பெண்கள் எவ்வித வாழ்க்கை நடத்துகின்றனர் என்பது தெரியாது; அந்தோ! மத குருமாரின் சட்ட திட்டங்களுக்குக் கற்றறிந்த முஸ்லீம்களும் செவிசாய்த்துத் தங்கள் தாய்நாட்டு முன்னேற்றத்துக்குரிய பெண் மக்களை—இயற்கையின் பெரும் பகுதியை—அந்தகாரத்தில் அடைத்து வைத்திருந்தார்கள்.

ஒரு நாடு முன்னேற்றம் அடைதல்—ஒரு சமூகம் முன்னேறுதல் — அந்நாட்டு, அச் சமூகத்துப் பெண் மக்களைப் பொறுத்துள்ளது. அவர்கள் கல்வி கற்றுச் சுதந்தர மாதர்களாக விளங்கினாற்றான், அவர்தம் பிள்ளைகள் நாட்டுக்குகந்த—சமூகத்துக்குகந்த உண்மை மக்களாக விளங்கக் கூடும். கற்சுவர்களிலும், துணிச் சுவர்களிலும் அவர்களை அடைத்து, வாழ்வைச் சிதைத்து அடிமைப்படுத்தினால், அவர்தம் பிள்ளைகள் தாய்நாட்டை இழக்க வேண்டும் கேவல நிலையில் இருப்பார்கள் என்பதில் ஐயமென்ன?

இவ்வுயரிய உண்மையை மிக நுணுக்கமாக உணர்ந்த துருக்கித் தலைவர் கெமால் பாட்சா, கடுமையான சட்டங்களால், நெடுங்காலமாக வேரூன்றி அடிமைத் தனத்தை வளர்த்து வந்த படுதா முறையை அடியோடு ஒழித்துப் பெண்களுக்கு எல்லா உரிமைகளையும் அளித்தார். 'ஆண்களைப் போலச் சுதந்தரத்தோடு வாழ வேண்டுபவர்களே பெண்கள்; ஆண்டவன்

படைப்பில் அடிமைத்தனத்தை அகற்றுவேன்,' என வீர முழக்கஞ் செய்தார்; ஆடவர் பல பெண்களை மணந்து கொள்ளும் கொடிய வழக்கத்தையும் கடுமையான சட்டத்தால் வேரோடு களைந்தார்; ஆண்களைப் போலவே பெண்களுக்கு விவாக ரத்துச் செய்ய உரிமை உண்டாக்கினார்; கணவன் கொடுமைப்படுத்தினான் என்பது உறுதிப்படின், நீதிபதி விதிக்கும் ஜீவனாம்சத் தொகையைக் கணவன் மாதந்தோறும் கொடுக்கவேண்டும் என்ற சட்டத்தை ஏற்படுத்தினார்.

முஸ்தபா கெமால் பாட்சாவினால் துருக்கி மாதர் பூரண உரிமையைப் பெற்றுள்ளனர். அவர்கள் தங்களுக்குப் புத்துயிர் அளித்துத் தங்கள் வாழ்வை மேம்படுத்திய வெற்றி வீரர் கெமாலை மனமார வாழ்த்துகின்றார்கள். அவர்கள் இப்போது ஆடவருடன் பல துறைகளிலும் தீவிரப் போட்டியிட்டு வருகின்றார்கள். முன்னேற்ற ஏற்பாடுகளில் ஆடவருக்கொப்பாகவே பெண்களும் பேரூக்கங் காட்டி உழைத்து வருதல் குறிப்பிடத் தக்கது.

துருக்கிப் பத்திரிகைகள் யாவும் பெண்களுக்கெனத் தனியாகப் பக்கங்களை ஒதுக்கி வைத்து வேலை செய்கின்றன. மேனாட்டுப் பத்திரிகைகள் பெண்களுக்கு ஊக்கமளிக்கும் வழிகளில் எல்லாம் இவையும் உழைத்து வருகின்றன. இப்பொழுது துருக்கியில் பத்திரிகையைப் படியாப் பெண்களின் தொகை மிக மிகக் குறைவென்றே கூறல் வேண்டும்.

துருக்கிப் பெண்களின் அன்றாட வாழ்வில் வெகு தீவிர மாறுதல்கள் காணப்பட்டு வருகின்றன. அவர்-

களுக்கு எல்லாத் துறைகளிலும் சமத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. அவர்களுக்கு ஓட்டளிக்கும் உரிமை தரப்பெற்றுள்ளது. விரைவில் சட்டசபைத் தேர்தலிலும் ஓட்டளிக்கும் உரிமை வழங்கப் பெறும் என்பதில் ஐயமில்லை.

இன்று ஆயிரக் கணக்கான மாதர் பாங்குகளிலும், கடைகளிலும், கச்சேரிகளிலும், சாப்பாட்டு விடுதிகளிலும், குத்தகை வேலைகளிலும், பள்ளிக்கூடங்களிலும், வைத்திய சாலைகளிலும், பிற வேலைகளிலும் ஈடுபட்டுள்ளனர். துருக்கியில் தற்போது ஒரு பெண் நியாயாதிபதியும் இருக்கின்றார் என்பது குறிப்பிடத் தக்கது. வைத்தியம், உயர்தரக் கல்வி முதலியவற்றின் பொருட்டுப் பெண்கள் இங்கிலாந்து, ஜேர்மனி, பிரான்சு முதலிய மேனாடுகட்கும் சென்று வருகின்றார்கள். இப்போது கப்பல்களிலும், போலீசிலும் பெண்கள் தங்களை எடுத்துக்கொள்ளுமாறு அதிகாரிகளை வற்புறுத்தி வருகின்றார்கள் எனின், பெண்களுக்குக் கல்வியிலும், சுதந்தரத்திலும், தொண்டிலும் உள்ள அளவிலா ஆர்வத்தை என்னென்பது!

வாலிப மாதர் மேனாட்டு மகளிரைப் போலவே ஆடை அணிந்து வெளிப்படுகின்றனர்; தேகாப்பியாச முறைகளைக் கைக்கொண்டு வருகின்றனர்; டென்னிஸ், படகோட்டுதல், நீந்துதல், குதிரை ஏற்றம் முதலிய பல விளையாட்டுத் துறைகளிலும் முன்னேறி வருகின்றனர்; வெளி நாட்டாருடன் சுதந்தரமாகப் பேசி வருகின்றனர். கல்வி கற்ற பெண்கள் கல்வி யறிவில்லாப் பெண்கள் இருக்கும் இடங்-

தேடிச் சென்று, அவர்களுக்குக் கல்வி கற்பிப்பது பெரிதும் பாராட்டற்குரியது. இம்மாதர், தம் முன்னேற்றத்துக்கெனப் பல சங்கங்களைத் தாபித்து வேலை செய்து வருகின்றனர். சுருங்கக் கூறின், இப்போதைய துருக்கி மங்கையர், குறுகிய நோக்கங்களை நீக்கிப் பரந்த அறிவைப் பெற்று, கணவருக்கேற்ற துணைவியராகவும், நாட்டு நலத்துக்கேற்ற நங்கையராகவும், அழகினுக்கோரு இருப்பிடமாகவும், வீரப் பிள்ளைகளைப் பெறுந் தாய்மாராகவும் விளங்கி வருகின்றனர் என்னல் மிகையாகாது.

1932-ஆம் ஆண்டு நடந்த சர்வ தேச அழகுப் போட்டியில் 'அழகு ராணி' எனப் பெயர் பெற்றுப் பரிசில் பெற்றவள் துருக்கிப் பெண்ணேயாவள். இப்பெருமை துருக்கிக்கு வரக் கெமால் பாட்சா பெண்களுக்காகச் செய்துள்ள சீர்திருத்தமே காரணமன்றோ?

பெண்கள் சுயேச்சையாக விளையாடுதலையும், கல்வி கற்பதையும், வேலை செய்வதையும், தேவ மகளிரை ஒப்ப உல்லாசமாக நடத்தலையும் காண்கையில், கெமால் பாட்சாவின் அகமும் முகமும் மலர்வது வழக்கம். அவர், "நாட்டின் உயிர் நாடியாக உள்ள பெண்களை அடிமைப்படுத்துதல் கொடிதினுங்கொடிது! இவர்களுக்குச் சுதந்தரம் அளிப்பது நாட்டுக்கே சுதந்தரம் அளிப்பதை ஒக்கும். இவர்களே பொதுத் தொண்டினைப் பொறுமையோடும் அன்போடும் செய்யப் பிறந்தவர்கள். யான் எனது தாய் நாட்டுக்கு ஏற்ற பணியையே செய்தேன்," எனக் கூறி மகிழ்வராம்.

துருக்கிப் பெண்மணிகளைப் போல நம் தாய் நாட்டுப் பெண்மணிகளும் கல்வியறிவு வாய்ந்து சமூகத் தொண்டு புரியும் நாளே நமது நாட்டு முன்னேற்றத்துக்குற்ற நன்னாளாகும்.

---

## 12. இளைஞரும் சமூகத் தொண்டும்

1. நாளை நீங்களே இந்நாட்டை ஆளப்போகிறீர்கள்; ஆதலின், சமூகத் தொண்டு செய்ய உரியவர்கள் நீங்களே.

—வேல்ஸ் இளவரசர்

2. இளைஞராற்றான் ஒவ்வொரு நாடும் முன்னேற்றம் அடைந்துள்ளது. நானும் ஓர் இளைஞனே.

—நெப்போலியன்

இளைஞரால் இயலாத காரியம் ஒன்றில்லை. இளைஞர்களாகிய நீங்களே வருங் காலத்தில் நம் தாய் நாட்டை அழகுபடுத்திப் புலவர்களாகவும் சாத்திர விற்பன்னர்களாகவும் அறிஞர்களாகவும் பெரு வீரர்களாகவும் விளங்குபவர்கள். நமது தாய் நாட்டு உயர்வோ - தாழ்வோ உங்கள் முன்னேற்றத்தைப் பொறுத்துள்ளது. நீங்கள் சமூகத் தொண்டு செய்வதற்கேற்றாற் போலவே வருங்கால இந்தியா விளங்கும் என்பதை மறவாதீர்கள். இங்கிலாந்தில் சில மாதங்கட்கு முன்னர் இளைஞரை நோக்கி வேல்ஸ் இளவரசர் செய்துள்ள சொற்பொழிவைக் கீழே காண்க:

"தாய் நாட்டு வீர மக்களே! என்னுடன் பிறந்த தாய் நாட்டுச் சகோதர சகோதரிகளே!! ஒவ்வொரு-

வரும் தம் வாழ்க்கையானது சிறப்படையப் பிறருடன் கலந்து உழைத்தல் வேண்டும். அவ்வாறு உழைத்தலே நம் கடமை என்பதை நீங்கள் அறிதல் வேண்டும். நமது எதிர்கால வாழ்க்கை நமது முயற்சியைப் பொறுத்துள்ளது என்பதை அறிய நீங்கள் ஆவேசம் கொள்வீர்கள்; எவ்வித இன்னல்கள் தோன்றினும், அவற்றைத் தகர்த்தெறிவீர்கள்.

"பிறருக்கு உதவி புரிய வேண்டுவது மக்கட் கடமையாகும்; இதனை உணர்ந்த நாம் ஒருவிதப் பயனையும் எதிர் பாராமல், பிறர்க்கு ஊழியஞ் செய்தல் வேண்டும். அங்ஙிலையிற்றான் நாம் உண்மையான குடிமக்கள் ஆவோம். ஊழியம், உதவி, தியாகம் முதலியவை இன்றி நமது வாழ்வைச் சிறப்பித்தல் இயலாது. நீங்கள் எங்கு இருப்பினும், ஊழியம் செய்தே தீர வேண்டும். நீங்கள் ஒவ்வொருவரும் சமூகத் தொண்டாற்ற முன் வந்தாற்றான் நாடு முன்னேற்றமடையும். ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தொண்டில் இன்றே இறங்குதல் வேண்டும். மந்திரத்தால் மாங்காய் விழுமா? உழைப்புக்கே பலன் அன்றோ!

"நாளை நீங்கள்தாம் இந்நாட்டை ஆளப்போகிறீர்கள். உங்கட்கு வேண்டுவது செல்வம் மட்டுமன்று; ஆரோக்கிய வாழ்வும் இன்ப வாழ்வும் இன்றியமையாதவையே. நமது நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருத்து இருப்பதை நீங்கள் அறிவீர்கள். வேலையில் இருக்கும் ஒவ்வொருவரும் வேலை இல்லாதாரைத் தம் அண்டை வீட்டவரெனக் கொண்டு, நண்பராக எண்ணி, உதவி புரிய வேண்டுகின்றேன். அவர்கள் அனைவரும்

வேலையின்றிச் சோம்பித் திரிகின்றனர். நீங்கள் அவர்களைப் பொது வேலைகளில் ஈடுபடுமாறு செய்தல் வேண்டும்; ஒவ்வோர் இடத்திலும் இருக்கும் வேலையற்றோரைத் திரட்டி, அவ்விடத்தில் அவசியமாகச் செய்ய வேண்டும் காரியங்களைச் செய்யுமாறு தூண்டுங்கள். இரண்டிரண்டு பேரை ஒவ்வொரு கிராமத்துக்கும் அனுப்பிச் சீர்திருத்தம் செய்யத் தூண்டவும். இங்ஙனம், வேலையைப் பல பகுதிகளாகப் பிரித்துப் பொது நன்மைக்குரிய காரியங்களைச் செய்தால், வேலையற்றோர் தொல்லை பெரிதும் குறையுமன்றோ?

"இம்முயற்சிகளில் நாம் சில இடங்களில் தோல்வியுறலாம். சில இடங்களில் தவறுகளும் நிகழும்! எனினும், நாம் எதற்கும் அஞ்சாமல், நாட்டு நலத்தினையே பெரிதெனக் கொண்டு, சமூகத் தொண்டாற்ற வேண்டும். ஆதலின், நீங்கள் நல்லறிவுடனும் மனக்களிப்புடனும் இம்முயற்சிகளில் ஈடுபடுங்கள். இதனால் சமூகத்தில் ஒரு வித ஊக்கமும் தொண்டு செய்யும் அவாவும் பெருகும். இதனால், நாட்டில் இதுபோதுள்ள இன்னல்கள் பல மறைந்தொழியும். நம் தாய் நாட்டுப் பெருமை என்றென்றும் உங்களுடையதாகுக."

அன்புள்ள பிள்ளைகளே, வேல்ஸ் இளவரசரின் பேருரையைப் பார்த்தீர்களா? அஃது எவ்வளவு உருக்கமாகவும் நாட்டு முன்னேற்றத்துக்கு ஏற்றதாகவும் இருக்கின்றது! ஆ! அவர் போதித்தவை அனைத்தும் ஆங்கில இளைஞருக்கு மட்டுமா? அன்று! அன்று!! உங்களுக்கும் என்பதை நீங்கள் மனத்தில் இருத்துதல் வேண்டும்.

"ஒரு நாடோ, சமூகமோ முன்னேற்றமடைய வேண்டுமாயின், பள்ளி மாணவர்களிடம் போய் முறையிடுங்கள்" எனப் பெரியார் ஒருவர் கூறியுள்ளதை ஆழ்ந்து நோக்குக. "என் மனம் இளைஞரையே நாடியுள்ளது," என்னும் சாக்ரடிஸின் அன்பு கனிந்த வார்த்தைகளை நினைவில் வையுங்கள்.

சுமார் ஐம்பதாண்டுகட்கு முன்னர்க் கேவல நிலையில் இருந்த ஜப்பான், இன்று உலக வல்லரசுகளில் ஒன்றாய் ஒளிர்வதற்குக் காரணம் என்ன? அந்நாட்டு இளைஞரின் அதிதீவிர முயற்சியே உற்ற காரணம் என்பதை அறிக. அவர்கள் பல சங்கங்களைத் தாபித்துக் கிராமங்களுக்குச் சென்று, ஏழை விவசாயிகட்கும் தொழிலாளர்க்கும் பல வழிகளில் உதவி செய்கிறார்கள்; கல்வியறிவற்றோர்க்குக் கல்வி போதிக்கிறார்கள்; பத்திரிகைகளைப் படித்து விஷயங்களைப் பொது மக்களுக்கு அவ்வப்போது அறிவிக்கிறார்கள். பெண்மக்களை முன்னணிக்குக் கொண்டுவந்தவரும் இளைஞரே ஆவர். அவர்களைப் போல நீவிரும் சமூகத் தொண்டில் இறங்குவீராயின், நமது சமூகமும் நாடும் விரைவில் முன்னேற்றமடையும்.

---

## 13. தாமே பயின்ற தமிழ்ப் பேராசிரியர்

குடிசையிற் பிறந்தோர் குபேரர் ஆவதற்கும், இயற்கையில் கல்வி கற்க வசதியற்றோர் நாளடைவில் கல்வி கற்று உலகில் உயர் நிலையை அடைவதற்கும், மிகத் தாழ்ந்த நிலையில் இருந்தோர் உலகிற் சிறந்த பெரி-

யாராய் விளங்குவதற்கும் காரணம் என்ன? அவர்கள் கொள்ளும் உழைப்பே காரணமாகும். உழைப்பு நெறியை உடையோர் அஞ்சாமை, சகிப்புத் தன்மை, தந்நம்பிக்கை முதலிய நற்குணங்களைக் கொண்டு வெற்றியைப் பெறுகின்றனர்.

இங்ஙனம் சலியாவுழைப்பாலும் தந்நம்பிக்கை-யாலும், இன்று தமிழ் உலகில் விளங்கும் பெரியார்களில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பண்டித. ந. மு. வேங்கடசாமி நாட்டார் ஒருவராவர். இவரது வாழ்க்கை வரலாறு - ஆசிரியர் இல்லாமலே அரிய தமிழ் நூல்களைக் கற்று மதுரைத் தமிழ்ச் சங்க முப்பெருந் தேர்வுகளிற் சிறப்பாகத் தேர்ச்சியுற்றமை - உங்களுக்குச் சிறந்ததோர் படிப்பினையையும் இன்பத்தையும் வியப்பையும் ஊக்கத்தையும் ஊட்டுமாதலின், அவ்விவரங்களை ஈண்டுக் கூறுகின்றேன்:

நாட்டார் தஞ்சை ஜில்லாவில் நீர் வளமும் நில வளமும் மிக்க நடுக்காவேரி என்னும் பதியில் நடுநிலையுடைய-தோர் குடும்பத்தில் 1884-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12-ஆந் தேதி பிறந்தார். இவர் தந்தையார் முத்துச்-சாமி நாட்டார் என்பவர்; சிறிது தமிழ் இலக்கியப் பயிற்-சியுடன் வேதாந்த நூற்பயிற்சியும் சோதிடப் பயிற்சி-யும் உடையவர். சிறிய தந்தையாரான சோக்கலிங்க நாட்டார் நிறைந்த தமிழறிவைப் பெற்று, இசையியல் வழுவாது கீர்த்தனங்கள் பாடும் திறமை வாய்ந்தவர்.

நாட்டார் இளம்பருவத்தில் உள்ளூரிலிருந்த திண்ணைப் பள்ளியிலும், ஆரம்பப் பள்ளியிலும் படித்த-தன்றி, ஆங்கிலக் கலாசாலைகளிலோ தமிழ்க் கல்லூரி-

களிலோ சிறிதும் கல்வி கற்றவரல்லர். இவர் சிறுவரா யிருந்த போதே திருத்தமாகப் பேசும் வழக்கமுடை-யவர். பள்ளியிற் பயின்ற போது வழுவின்றித் திருத்த-முறப் படிப்பதும், எழுதுவதும் இவருக்கியல்பாயிருந்-தன. படிப்பின்பொருட்டு ஆசிரியர்களால் இவர் சிறிதும் தண்டனை அடைந்ததே இல்லை. இவர் கற்பிக்-குந் தொழிலில் அவ்வப்போது ஆசிரியர்கட்கு உதவி-யாயிருந்தமை குறிப்பிடத் தக்கது. திண்ணைப் பள்ளி-யில் இவர் படித்த காலத்தில் தந்தையாரது தூண்டு-தலால் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றி-வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி என்னும் நீதி நூல்களும், திருக்குறளில் ஐம்பது அதிகாரங்களும் பாடஞ் செய்து ஒப்புவித்தனர். இதுவே இவரது பிற்காலக் கல்விக்கு அடிப்படை என்னலாம்.

இவர் பள்ளியிலிருந்து வீடு மீளும்போதும்ஏனைய ஓய்வு நேரங்களிலும் தமது வீட்டுத் திண்ணையிற் படிக்-கப் பெறும் பாரதம், இராமாயணம், கந்தபுராணம் முத-லிய கதைகளைக் கேட்டு மகிழ்வது வழக்கம். சில வேளை-களில் இவரே கதையைப் படிப்பவராகவும் இருப்பர்; கதைச் சுவையில் ஈடுபட்டு இவர் தாமே தனிமையாக அவற்றை அடுத்தடுத்துப் படிப்பதுமுண்டு. அருச்சு-னன் போன்ற வீரர்களின் வரலாறுகள் இவரது உள்-ளத்தைக் கொண்டுவிடும். தமிழைக் கற்பதில் இவருக்கு மிகுந்த ஆர்வத்தை உண்டாக்கியவை இவையேயாகும்.

பள்ளியை விட்ட பின்னர் இவர், தம் தந்தையா-ரிடம் சில அந்தாதிகளும், நைடதம் முதலியனவும் பாடங் கேட்டனர்; திருவிளையாடற் புராணத்தையும்

நைடதத்தின் பிற்பகுதியையும் தந்தையார் முன்னிலை-யில் பொருள் உணர்ச்சியோடு படித்து முடித்தார். இவர் வைகறையில் எழுந்து அருகிலுள்ள ஆற்-றுக்குச் சென்று நீராடி மீள்வர். உணவு கொண்ட நேரம் போக ஏனைய வேளைகளில் எல்லாம் தம் வீட்டு மாடியில் இருந்தே தமிழ் நூல்களைத் தாமே முயன்று படித்து வந்தார்.

மேலும் கற்பதற்கு வேறு ஆசிரியர் உதவி இன்மையாலும், வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டு பயிர் செய்து உழைக்க நேரிட்டமையாலும், பதினைந்து வயதுக்குமேல் ஐந்தாண்டுகள் வரை இவரது படிப்பு அடியுடன் நின்றுவிட்டது. எனினும், தமிழ் அறிஞர் எவரேனும் தம் ஊருக்கு வந்தபொழுது அவரோடு அளவளாவும் பேறு இவருக்கிருந்து வந்-தது. தமிழ்ச் செய்யுட்களின் பொருளை உள்ளவாறு அறியுமாற்றல் இவர்பால் மிளிர்தலைக் கண்டு அன்னோர் மகிழ்வது வழக்கம்.

இங்ஙனம் இவர் பதிக்கு வந்த பெரியார்களில் தஞ்சை ஜில்லா ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் மேற்பார்வையாளராக இருந்தவரும், 'சாவித்திரி வெண்பா' என்னும் நூலின் ஆசிரியருமான ஐ. சாமிநாத முதலி-யார் ஒருவராவர். அவர் இவரோடு பேசுகையில் தமக்குப் பொருளாகாதிருந்த ஒரு தொடருக்கு இவர் பொருள் விரித்ததைக் கண்டு வியந்து, இவரிடம் நட்புக்கொண்-டனர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் முதன் முதலாகத் தனித் தமிழ்ப் பரீட்சைகள் ஏற்படுத்தப்பெற்ற செய்-தியை இவருக்கறிவித்து, ஒவ்வொரு பரீட்சைக்குஞ்

சென்று முதன்மையுறத் தேறிப் பரிசில் பெறத் தூண்டியவர் முதலியாரேயாவர்.

1905-ஆம் ஆண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தனித் தமிழ்த் தேர்வுகள் ஆரம்பமாயின. முதலியார் இவருக்கு அறிவித்த காலத்துக்கும் பரீட்சை நடைபெறுவதற்கும் இடையே பத்து மாதங்களே இருந்தன. முதற் பரீட்சையாகிய பிரவேச பண்டித பரிட்சைக்குரிய புத்தகங்கள் இன்னவை என்றும் சரிவர அறிந்துகொள்ள வசதி இல்லாதிருந்தது. 'விசாகப் பெருமாளையர் யாப்பணி இலக்கணம்' என்னும் நூல் கிடைக்காமையால், நாட்டார் அதை முற்றிலும் எழுதி வாசித்தார். ஆ! கல்வியில் இவருக்கிருந்த ஊக்கந்தான் என்ன!

பரீட்சை ஆரம்பமான அதேஆண்டில் இவர் முதல் பரீட்சைக்குச் சென்று, முதல் வகுப்பில் இரண்டாவதாகத் தேறி, அதற்குரிய பரிசிலும், இலக்கணத்தில் முதன்மை உற்றதற்காக வேறு தனிப் பிரிசிலும் பெற்றனர். அடுத்த ஆண்டிலேயே பால பண்டிதத் தேர்வில் தாம் ஒருவரே முதல் வகுப்பில் தேறி, முதற் பரிசில் பெற்றனர். அடுத்த ஆண்டே (1907-ஆம் வருடம்) பண்டிதத் தேர்வுக்குஞ் சென்று, தாம் ஒருவரே முதல் வகுப்பில் தேறி முதற் பரிசிலாகத் தங்கத்தோடாவைப் பெற்றனர்.

இவருக்குப் பின்னர்ச் சில ஆண்டுகள் சென்ற பின்னரே ஒரு சிலர் பண்டிதத் தேர்வுக்கு வந்து தேறுவாராயினர். மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலையில் இரண்டிரண்டு வருடம் பாடம் கற்பிக்கப் பெறு-

கின்ற பரீட்சைக்குரிய இலக்கியம், இலக்கணம், தருக்கம் ஆகிய யாவற்றையும் பிறர் உதவி இன்றியே இவர் ஒவ்வோராண்டிலும் கற்று முதன்மையாகத் தேறினமைக்குக் காரணம் என்? சலியா உழைப்பும் தமிழில் இருந்த ஆர்வமுமேயாம். அன்புள்ள பிள்ளை-களே, நாட்டார் அவர்களின் கல்விப் பெருக்கத்தையும் ஊக்கத்தையும் கண்டீர்களா? இப்பெரியாரைப் போல நீங்களும் உண்மைத் தமிழர்களாக விளங்குவீர்களா?

இவரது திப்பிய புலமையையும் சலியா உழைப்-பையுங் கண்டு தமிழறிஞர் இவரைப் பெரிதும் போற்-றினமை கண்டு இவர் ஆருயிரனைய தந்தையார்கொண்ட மகிழ்ச்சியைக் கூறவும் வேண்டுமோ? 'இத்தகைய நிரம்பிய அறிவைப் பெற்ற இப்புதல்வரைப் பெற்ற முத்துச்சாமி நாட்டாரே பேறு பெற்றவர்' என அறிஞர் அவரைப் புகழ்வாராயினர்.

'மகன் தந்தைக் காற்று முதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்,' என்னும் உண்மை உரையைப் பேராசிரியர் வேங்கடசாமி நாட்-டார் மெய்ப்பித்துக் காட்டினர்.

1907-ஆம் ஆண்டில் இவருக்குத் திருமணம் நடந்தது. 1908-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் இவர் திரிசிரபுரம் ஹீபர் கல்லூரித் தமிழாசிரியரான பிச்சை இப்ரகீம் புலவர் வேண்டுகோளின்படி அவருக்குப் பதி-லாகக் கல்லூரியில் தமிழாசிரியர் பதவியை ஏற்றார்; பின்னர் 1909-ல் கோயமுத்தூர் செயிண்டு மிக்கேல் உயர்கலாசாலைத் தமிழாசிரியராக இருந்தார்; 1910-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஹீபர் கல்லூரித் தலை-

வரான கார்டினர் துரை வேண்டுகோளுக்கு இணங்கிக் கல்லூரிப் போதகாசிரியர் பதவியை ஏற்றார். அன்று முதல் 1933-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை இவர் அக்கல்லூரியிலேயே தமிழ்ப் பேராசிரியாக இருந்தார். அவ்வாண்டு ஜூலை மாதம் முதல் அண்ணாமலைச் சர்வ கலாசாலையார் இவரைத் தம் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பெற்றுள்ளனர். ஏன்? நாட்டாரின் திப்பிய புலமையும் சிறந்த ஒழுக்கமும் போதிக்கும் ஆற்றலுமே காரணங்களாகும்.

இப்பெரியாரிடம் கல்வி கற்றோர் பலர் ஆங்கிலப் பட்டங்களோடு இம்மாகாணத்தில் பல கல்லூரிகளில் தமிழாசிரியர்களாகவும், உயர் கலாசாலைகளில் தமிழ்ப் புலவர்களாகவும் இருந்து வருகின்றனர். இவரிடம் சின்னாட்களே கற்றவர் 'யாம் நாட்டார் அவர்களி-டம் கல்வி கற்றோம்' எனக் கூற விரும்புகின்றன-ரெனின், இவருக்குத் தமிழ் நாட்டில் உள்ள பெருமை-தான் என்ன!

இத்தமிழ்ப் பேராசிரியர் இதுவரை வெளிவராத் தமிழ் ஆராய்ச்சி நூல்கள் பல எழுதி வெளியிட்டுள்-ளார். அவை சென்னை, திருவாங்கூர், மைசூர், இலங்-கை முதலிய இடங்களிலுள்ள சர்வகலாசாலைகளால் அங்கீகரிக்கப் பெற்று மெட்ரிகுலேஷன், எப்.ஏ., பி.ஏ. வகுப்புகளுக்குப் பாட புத்தகங்களாக வைக்கப்பட்-டுள்ளன. சங்கக் கீழ்க் கணக்கு நூல்களுக்கும், திருவிளை-யாடற் புராணத்துக்கும் மிகவும் அரிய உரை எழுதி-யுள்ளமையே இவர் பெயர் என்றும் தமிழ் உலகில் நிலைத்திருக்க ஏது என்னலாம்.

இவற்றோடு நில்லாது, இவர் தமிழ் நாடெங்கும் சுற்றி அன்பர்கள் வேண்டுகோளின்படி ஆங்காங்கு அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்திப் பெரும் பெயர் பெற்றுள்ளார்; இன்றும் பெற்று வருகின்றார். இவரது நிறைந்த புலமையை வியந்த சென்னைச் சர்வகலாசாலை-யார் தமிழ் வித்துவான் பரீட்சகருள் இவரையும் சேர்த்திருந்தனர். மதுரைச் சங்கப் பரீட்சைகளிலும் இவர் பரீட்சகராக இருந்து வந்தார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் அடிக்கடி அவைத்தலைமை வகித்து இவர் ஆற்றிய சொற்பொழிவுகள் தமிழர் செவிகளில் இன்-றும் ஒலித்துக்கொண்டிருக்கின்றன.

தமிழ் மொழியின் ஆக்கத்திற்கு இன்னும் இவர் இயற்றக் கருதியுள்ள நூல்களும், செய்யக் கருதியுள்ள தொண்டுகளும் பலவாம். இப்பெரியாருக்கு நல்லுடலை-யும் நீண்ட ஆயுளையும் அளித்துத் தமிழ்ச் செல்வராக வைத்திருக்குமாறு நாம், திருவருளைச் சிந்திப்போமாக.

உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?

**—பட்டினத்தார்**

---

## 14. வாஷிங்டனும் சமூகத் தொண்டும்

1. *மனிதன் தன் போன்ற உயிர்கட்குத் தொண்டு செய்தலே சிறந்தது.* **—டீக்கன் அம்மையார்**

2. *சமூகத்தொண்டு புரியுங்கள்; சமூகத்தை உயர்த்துங்கள்.* **—பூகர் வாஷிங்டன்**

மனித வாழ்வின் நோக்கத்தையும், அந்நோக்-கத்தை நிறைவேற்றும் வழியையும் உணர்ந்து பாடு-

படுதலே சமூகத் தொண்டாகும். உணவு ஒரு வகையி-லும், அறிவு மற்றொரு வகையிலும், தொழில் பிறி-தொரு வழியிலும், கல்வி வேறொரு வழியிலுமாக முன்னேற்றமடையச் செய்யும் முயற்சியே உண்மை-யான சமூகத் தொண்டாகும். இத்தகைய அருட் பணியைச் செய்யும் பெருமக்கள், மக்களின் உள்ளத் தாமரையில் இடம் கொள்வர் என்பது உறுதி. இப் பெருமக்களில் ஒருவரான பூகர் வாஷிங்டன் என்ப-வர்தம் அரிய வரலாற்றை ஈண்டுக் காண்க:

பூகர் வாஷிங்டன் அமெரிக்காவில் நீக்ரோவர் குலத்தில் 1858-ஆம் வருடம் பிறந்தவர். அவர் சிறு வயது முதற்கொண்டே உப்புச் சுரங்கத்தில் வேலை பார்த்து வந்தார். சிறுவராயிருந்தும் அவர் மிக்க அறிவுற்றவராதலின், தம் இனத்தாரான நீக்ரோவர்தம் கேவல அடிமை வாழ்வை நினைந்து நினைந்து மனம் புண்-ணுயினர். அவர் ஒரு நாள் 'நம் இனத்தாரை எங்ஙனம் முன்னேறச் செய்வது? வயிற்றுக் கஞ்சிக்கும் நம்மவர் படுந் துன்பம் காணச் சகிக்கக் கூடவில்லையே. அந்தோ! விலங்கு வாழ்வு வாழ்ந்து, நம்மவர் இறக்கும் கொடுமை-யைக் காணக் கூடவில்லையே! கேவலம் இந்த உப்புச் சுரங்கத்தில் வேலை செய்யவோ நம்மை இறைவன் படைத்துளன்? நானுவது கல்வி கற்க வேண்டும்,' எனக் கூறித் தம் வீடு சென்றார்.

வீடு சென்ற வாஷிங்டன் தம் தாயை அணுகி ஒரு புத்தகம் பெற்றுக் கல்வி கற்கலானுர்; பின்னர், ஓர் இராப் பள்ளியில் படித்தார்; பகல் முழுவதும் உப்புச் சுரங்கத்திலும் நிலக்கரிச் சுரங்கத்திலும் வேலை

பார்த்து, இரவில் இராப் பள்ளியில் கல்வி கற்கலானார். அக்காலத்தில் ஹாம்டன் என்ற இடத்தில் ஒரு விவசாயப் பள்ளி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அதைக் கேள்வியுற்ற வாஷிங்டன் அங்குச் சென்று கல்வி கற்க விரும்பினார். அவர் இருந்த ஊருக்கும் ஹாம்டன் நகருக்கும் இடையில் 500 மைல் தூரம் இருந்தது. வாஷிங்டன் கையிலோ பணமில்லை. சிறிது பொருளேனும் இன்றி 500 மைல் கடந்து செல்வது இயலாத காரியம் அன்றோ? அதனால், வாஷிங்டன் சிறிது பொருள் சேர்க்க விரும்பித் தம் சுரங்க வேலையை விட்டு ஒரு கனவான் வீட்டில் வேலைக்கமர்ந்தார்; அங்கு, வேலை செய்த நேரம் போக, எஞ்சிய நேரத்தில் அவ்வில்லச் சீமாட்டியின் உதவியால் கல்வி கற்றார். எனினும், கையில் பொருள் சேரவில்லை. என்றாலும், அவர் எவ்விதத்திலும் ஹாம்டனுக்குச் செல்வதென்றே தீர்மானித்தார். அவர் இனத்தார் அவரது பெருவிருப்பத்தைக் கண்டு மகிழ்ந்து ஆசீர்வதித்தனர். பெற்றோர் அவரை விட்டுப் பிரிய வருந்தினர். எனினும், வாஷிங்டன் தன் பெற்றோரிடம் மன்றாடி விடைபெற்றுக் கொண்டார்.

தந்நம்பிக்கையையே துணையாகக் கொண்டு ஏழை வாஷிங்டன் கால் நடையாக ஹாம்டனுக்குப் புறப்பட்டார்; சிறிது தூரம் நடந்து செல்வார்; பசியை இயன்றவரையில் அடக்கிப் பார்ப்பார்; பசி அதிகமாயின், ஒரு வீட்டுக்குச் சென்று ஏதேனும் வேலை செய்து உண்பார்; இவ்வாறு கூறுதற்கரிய இன்னல்களை அனுபவித்து, முடிவில் ஹாம்டனை அடைந்தார்.

வாஷிங்டன் ஹாம்டனை அடைந்தவுடனே தமக்கு எல்லாக் கல்வியும் வந்ததாகவே நினைத்து மகிழ்ந்தார். பசியினால் மெலிந்து, கேவல உடை அணிந்து இருந்த அவர் நேரே விவசாயப் பள்ளியை அடைந்தார்; தமது விருப்பத்தை அப்பள்ளித் தலைவரிடம் அறிவித்தார். அத்தலைவர் அவரைத் தன் அறையைச் சுத்தம் செய்யுமாறு கட்டளை இட்டார். சிறுவர் அந்த அறையை மிகத் தூய்மையாக்கினார். அதைக் கண்ட தலைவர் அவர்மீது அன்புகொண்டு, அவரைக் கல்விச் சாலையின் காவற்காரராக நியமித்தார். அவ்வமயம் வாஷிங்டன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

காவற்கார வேலையால் பெறும் ஊதியத்தைக் கொண்டு உணவுண்டு, பள்ளியிலும் அவர் கற்கலானார்; தமது ஊக்கத்தாலும் உழைப்பாலும் அங்கிருந்தோர் மனத்தைக் கவர்ந்தார். அனைவரும் வாஷிங்டனைப் போற்றினர். அப்பள்ளி ஆசிரியரான 'ஆம்ஸ்டிராங்கு' என்பவர் அவருக்குச் சிறந்த கல்விப்பயிற்சி அளித்தார். இங்ஙனம் வாஷிங்டன், சில ஆண்டுகளில் கல்விப் பயிற்சியைப் பெற்று, உபாத்தியாயர் பட்டத்தையும்பெற்று, 1878-ஆம் ஆண்டில் மால்டன் என்னும் இடத்தில் உள்ள நீக்ரோவர் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தார்.

ஆசிரியரான பின்னரும், அவர் படிப்பதை நிறுத்தவில்லை; வாஷிங்டனில் உயர்தரக் கல்வி கற்றார். வாஷிங்டனின் சிறந்த அறிவைக்கண்டு வியந்த 'ஆம்ஸ்டிராங்கு' என்னும் ஆசிரியர் அவரை ஹாம்டன் பள்ளியின் ஆண்டு விழாவுக்கு அழைத்தார்; அவ்வமயம் பல வெள்ளையரும் அங்கிருந்தனர். பெருமக்கள் பலர்

நிறைந்திருந்த அவ்விழாவில் ஆசிரியர் வாஷிங்டனைப் பேச விட்டார். அமெரிக்காவில் வெள்ளையர் கூட்டத்தில் ஒரு நீக்ரோ பேசியது அதுதான் முதல் முறையாகும். ஆ! வெள்ளையர் யாவரும் நீக்ரோவான வாஷிங்டன் செய்த அற்புதமான சொற்பொழிவைக் கேட்டு வியந்தனர். 'நீக்ரோவர், மக்கள் இனத்தில் தாழ்ந்தவர் அல்லர். அவர்கட்குப் போதுமான கல்விப் பயிற்சி அளிப்பின், அவர்களும் நாகரிக ஜாதியினராய் விரைவில் மாறிவிடுவர்,' என்னும் உண்மையை வெள்ளையர் அப்போதே உணர்ந்தனர். வாஷிங்டனின் பிரசங்கமும் இவ்வுண்மையைத் தழுவியே இருந்தது. "விரல்களைப் போல நாம் சில விஷயங்களில் வேறுபட்டிருக்கலாம்; ஆனால் கையைப் போல நாம் இணைந்துள்ளோம். நாம் இரு திறத்தாரும் ஒன்றுபடின், நம்மால் ஆகாத காரியம் ஒன்றில்லை," என்று அவர் தெளிவாக எடுத்துக் கூறியபோது அவையினர் அடங்கா மகிழ்ச்சி கொண்டனர். அன்று முதல் வாஷிங்டன் பெயர் அமெரிக்காவில் பரவலாயிற்று.

மேற்கூறிய நிகழ்ச்சிக்குப் பின்னர் ஆம்ஸ்டிராங்கின் வேண்டுகோளின்படி வாஷிங்டன் சில செவ்விந்தியர்க்குக் கல்வி கற்பித்தார்; ஓர் இராப்பள்ளியும் வைத்து நடத்தினார். அவரது திறமையைப் பாராட்டிய ஆசிரியர் 1871-ஆம் வருடம் டஸ்கீ என்ற இடத்தில் நீக்ரோவருக்கு ஏற்பட்ட கலாசாலையைத் தலைமை வகித்து நடத்த வாஷிங்டனைச் சிபார்சு செய்தார். இக் கலாசாலை வாஷிங்டன் மேற்பார்வைக்கு வந்ததும் சீர்படலாயிற்று. டஸ்கியில் நீக்ரோவரும் செவ்விந்தி-

யரும் இருந்தனர். அவர்கள் கல்வியில் பேரூக்கங் காட்டினார்கள். வாஷிங்டன் முதலில் சில மாணவர்களைச் சேர்த்துச் சுகாதாரம், ஒழுக்கமுறை இவற்றைப் போதித்தார்; பின்னர்த் தம் வருவாயில் தம் உணவு உடைகளுக்கு வேண்டிய தொகை போக, எஞ்சியதை அப்படியே பள்ளியை விருத்தியாக்கச் செலவிட்டார்; சிறிது காலத்திற்குள் பெரிய தோட்டம் ஒன்றை வாங்கி, அதில் விவசாயக் கல்வியை மாணவர்க்குக் கற்பித்தார்; காடாயிருந்த அத்தோட்டத்தைத் தம் மாணவரைக் கொண்டே விளைநிலமாக்கினார்; தாமே மண்வெட்டியை எடுத்து மாணவருடன் உழைத்து வேலை செய்தார். விவசாயக் கல்வி போதிக்கப்படுவதை அறிந்த நீக்ரோவர், மேலும் மேலும் வந்து பள்ளியில் மாணவராகச் சேர்ந்தனர். மாணவர்கள் அதிகமாகவே, அவர்கள் தங்குவதற்குக் கட்டடம் இல்லை. எனவே, வாஷிங்டன் அவர்களைக் கொண்டே செங்கல் சூளைகளையும் சுண்ணும்புச் சூளைகளையும் போடச் செய்து, மரவேலை, கொத்து வேலை யாவற்றையும் தாமும் உடனிருந்து செய்வித்தார். சிறிது காலத்திற்குள் அழகிய கட்டடம் கட்டப்பட்டது.

மேலும், பல தொழில்கள் கற்பிக்கப் போதிய வசதிகள் இன்மையால், வாஷிங்டன் பணத்துக்கெனச் சுற்றுப் பிரயாணஞ் செய்யலானார். ஆங்காங்குப் பிரசங்கங்கள் புரிந்து, தம் மக்களின் எளிய நிலையையும், கல்வியில் அவர்களுக்கு இருக்கும் ஆர்வத்தையும் விரிவாகக் கூறித் திரண்ட பொருளைச் சேர்த்தார். அப்பொருளைக் கொண்டு பல திறப்பட்ட கைத்தொழில்

முறைகளை மாணவ மாணவிகட்குக் கற்பிக்க ஏற்பாடு செய்தார்.

வாஷிங்டன் சமூகத்தொண்டு புரிவதைப் பாராட்டிப் பல சர்வகலாசாலைகள் அவருக்குப் பல பட்டங்களை வழங்கின. அவரால் நடைபெற்ற பள்ளிக்கூடத்தைக் காண அமெரிக்காவின் குடியரசுத் தலைவரே டஸ்கிக்கு விஜயம் செய்தார். ஐக்கிய மாகாணச் சட்டசபை வாஷிங்டனின் அரிய தொண்டை வியந்து, அவரது கல்விச்சாலைக்கு ஸ்தாபனப் பத்திரம் அளித்தது. வாஷிங்டன் பெருமை ஐரோப்பாவிலும் பரவலாயிற்று. ஐரோப்பியர் அவரைத் தம் நாடுகட்கு அழைத்து, மரியாதை செய்தனுப்பினர்.

மிகச் சிறிய பள்ளிக்கூடம் வாஷிங்டனது பெரு முயற்சியால் மிகச் சிறந்தவொரு கலாசாலையாக மாறிற்று. ஆயிரக் கணக்கான மாணவர் அங்குக் கல்வி கற்று மேதாவிகளாக விளங்குகின்றனர். மிகப் பெரிய பரந்த வெளியில் இலட்சக் கணக்கான டாலர்கள் மதிப்புள்ள 107 கட்டடங்களுடைய அக்கலாசாலை நீக்ரோ மக்களை ஆதரிக்கும் தரும ஸ்தாபனமாக விளங்கி வருகின்றது. விவசாயத்துக்கென ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலம் இருக்கின்றது; கணக்கற்ற மாடுகள் அங்கு வளர்க்கப்படுகின்றன; மரவேலை, இரும்புவேலை, சித்திரவேலை, துணி வெளுத்தல், அச்சு வேலை, நெசவு வேலை, தையல், தோல்வேலை, வண்டி செய்தல், மின்சார வேலை, தகர வேலை முதலான பல திறப்பட்ட வேலைகள் அங்கு நடைபெறுகின்றன. பெண்களுக்குத் தொழிற்கல்வியும் மொழி வளர்ச்சிக்குரிய கல்வியும், வைத்தியப் பயிற்-

சியும் அளிக்கப்படுதல் குறிப்பிடத் தக்கது. மாணவர்க-ளுக்கு இராணுவப் பயிற்சியும் அளித்து வருதல் போற்-றற்குரியது. மிகப் பெரிய வைத்தியசாலையும் சுமார் 20,000 புத்தகங்கள் உள்ள நூல் நிலயமும் அங்கு இருக்கின்றன. அக்கலாசாலையில் இன்றும் ஆண்டு-தோறும் நீக்ரோவர் மஹாநாடொன்று கூட்டப்படு-கிறது.

இங்ஙனம், பூகர் வாஷிங்டன் தமது சமூகத்-துக்கு அளவிலாத் தொண்டு செய்தார். இவரது அரிய உழைப்பால் நீக்ரோவர் சிறிது சிறிதாக முன்-னேற்றம் அடைந்து வருகின்றனர். இவரைப் போன்ற வாஷிங்டன் பலர் நம் தாய் நாட்டு எளிய மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதை எவரேனும் மறக்க முடியுமா?

---

## 15. ஒழுக்கத்தின் உயர்வு

1. சிறந்த ஒழுக்கமே மனிதனின் இலட்சியமாகும்.

—**காந்தியடிகள்**

2. ஒழுக்கம் உள்ளவனே மனிதன் எனப்படுவான்.

—**ரோமேய்ன் ரோலண்டு**

ஒழுக்கம் ஒன்றே மனிதனின் உயிர் நாடியாக இருப்பது. இப்பூத உடலைக் களைந்து புனித உடலைக் கொள்ளுங்கால் நம்முடன் வருவது நமது ஒழுக்-கமே ஆகும். ஆதலின், எல்லாச் சமயங்கள் ஒருங்கே கூறுவதும் ஒழுக்கத்தைப் பற்றியே என்க. ஒழுக்கச் சிறப்பை ஊட்டாத சமயம் வீணானதே ஆகும்.

நம்முன்பலர் ஒழுக்கநெறியில் நடவாமல், பட்டங்கள் பெற்றுப் பதவிகள் வகித்துக் கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என இருந்து வருவது வருந்தத் தக்கது. வேறொரு சமயத்தைச் சார்வதால் தூயராய்விட்டதாகவும் பலர் எண்ணுகின்றனர். இது பேதைமையே தவிர வேறன்று. அரசனாயினும்-ஆண்டியாயினும் ஒழுக்கமே உயர்ந்த ஆபரணம். அதுவே நிலைபெற்ற அழகைத் தர வல்லது. எவன் தன்னை ஒழுக்க முறையால் சீர்படுத்திக்கொள்ளுகிறானோ, அவன் தாழ்ந்த நிலையில் இருப்பினும் உண்மை மனிதன் ஆகின்றான்; ஆண்டவனுக்கு உகந்த அன்பன் ஆகின்றான்.

இறைவன் நம்முள்ளே எல்லையற்ற சக்திகளைப் புகுத்தியுள்ளான். அவற்றால் நாம் நம்மை உயர்த்திக் கொள்ளவோ-தாழ்த்திக்கொள்ளவோ கூடும்; உயர்த்தினால், இன்ப நிலை எய்துகிறோம்; தாழ்த்தினால் துன்ப நிலையை எய்துகின்றோம். இவ்விரண்டில் எதை நீங்கள் விரும்புகிறீர்கள்? ஆம்; நீங்கள் இன்ப நிலையையே விரும்புவீர்கள் என்பது எனக்குத் தெரியும். உங்களைப் பிடித்துத் தம் ஆட்சியைச் செலுத்தும் தீயகுணங்களை ஒழித்தால், நீங்கள் இன்ப நிலையைத் திண்ணமாய்ப் பெறுவீர்கள்.

நாம் தீய செயல் புரிகையில் நமது உணர்ச்சி நரம்புகளில் ஒரு வித மாறுதல் உண்டாகின்றது. அதனால், தீச்செயல் மேலும் புரிய எளிதாகிறது. அங்ஙனமே, நற்செயலைப் புரிகையில் இதற்கு மாறான பயனை நாம் பெறுகின்றோம். ஆகவே, நாம் நல்லவற்றையே செய்துகொண்டு போவோமாயின், பின்னர்

எப்பெரிய காரியமாயினும், எளிதில் முடிக்கக் கூடிய நிலையை எய்துகின்றோம்.

தீய வழக்கங்களும் செயல்களும் எவற்றால் நிகழ்த்தப்படுகின்றன என்பதை நாம் ஆராய்தல்வேண்டும். காரியங்கள் எண்ணத்தாலேயே நடத்தப்படுகின்றன. 'செய்கையின் ஆரம்பமே எண்ணம்' என்பதை நாம் அறிதல் வேண்டும். ஆகவே, நம் எண்ணங்களை உயர் நிலையிற் செலுத்துவோமாயின், தீய குணங்கள் நம்மை விட்டு ஒழியும். ஒருவன் தீயவற்றிற் சிந்தனை செலுத்துவானாயின், அவன் அண்மையிலேயே தனக்குப் படுகுழியைத் தோண்டிக்கொள்பவனாகின்றான் என்பதை மறவாதீர்கள்.

இவ்வுலகில் சிலர் தினமும் 15 அல்லது 18 மணி நேரம் உழைத்து வருதலைக் காணலாம். அவர்கள் நோயற்ற வாழ்வுடையவர்கள். அவர்கள் எண்ணங்களை உயர் நிலையில் வைத்திருப்பவர்கள். அதனால், அவர்கள் உடல் உரம் பெற்று, நோயற்ற இன்ப வாழ்வை நடத்தி வருகின்றார்கள். தெய்வீக நியதியின்படி—ஒழுக்க முறையில்—நல்ல எண்ணங்களோடு வாழ்க்கை நடத்துவோமாயின், நாம் இன்ப வாழ்வை எளிதிற் பெறலாம்! இதில் மந்திரம் இல்லை; மாயமும் இல்லை. தூய எண்ணங்களே காரணம்.

நேர்மையான வழியில் எண்ணங்களைச் செலுத்துவதோடு நில்லாமல், நேர்மையான காரியங்களையும் செய்துவர வேண்டும். இளைஞர்கள் உடலோம்பலில் மிக்க ஈடுபட்டுப் பல திறப்பட்ட விளையாட்டுகளில் மனத்தைச் செலுத்தல் வேண்டும். முதியோர்

சிறு விளையாட்டுகளிலும் அறிவுப் பெருக்க முறையிலும் கவனத்தைச் செலுத்தல் வேண்டும். அறிவுள்ள மக்கள் தங்கள் எண்ணங்களை அடக்கித் தங்கள் வாழ்வைத் தங்கள் விருப்பப்படி நடத்திக்கொள்ளலாம். மனத்தின் தன்மை உணராதோர் தம் மனத்தில் தீய எண்ணம் தோன்றும் பொழுது உடனே மனத்தை வேறு வழியிற் செலுத்த ஏதேனும் ஒரு வேலையில் ஈடுபடல் வேண்டும். சோம்பல் என்னும் தீமை அவர்களிடம் சிறிதும் இருத்தலாகாது.

ஆசைகள் மிக்க பலத்துடன் தோன்றக் கூடியவை. அவற்றிற்கு நாம் அவசியம் இரையாகும்படி நேரலாம். எனினும், உடனே அவற்றால் உண்டாகும் முடிவை ஆராய்ந்து, மிகவும் கவனத்துடன் நேர்மையான துறையில் நாம் நடத்தல் வேண்டும். நாம் சிறந்த வழிகளில் செல்லுதலை இறைவனது தெய்வீகச் சக்தி ஆதரித்து உதவி புரிகின்றது என்பதை உறுதியாய் நம்புவோமாயின், நாம் சுக வாழ்வை விரைவில் அடையலாம். தைரியத்தைத் தளர விடாமல் நடப்போமாயின், நமது வாழ்க்கை வெற்றி இன்பத்திலேயே முடியும் என்பதைக் கண்கூடாகக் காணலாம். மனம் போல வாழ்வு என்பதை மறவாதீர்கள்.

---

# 16. தூக்கத்தின் அவசியம்

1. தூய காற்றோட்டமுள்ள இடத்தில் தூங்குதல் நன்று.

—F. G. நியூமன் M.B.

2. நாம் நித்திரையின் காலத்தையும் தூங்கும் தன்மை-யையும் சீர்படுத்துவதில் நமது எதிர்கால ஜீவியம் அடங்கி உள்ளது.

—டோனல்டு ஏ. லேயர்டு

நம் வாணுட்களில் மூன்றில் ஒரு பாகம் தூக்கத்-தில் கழிகின்றது. மக்கள் உயிர் வாழ்வதற்கு உணவு எவ்வளவு சிறந்ததோ அவ்வளவு சிறந்தது தூக்கமும் என்பதை அறிதல் வேண்டும். தூக்கத்தின் அவசியத்-தைப் பெரும்பாலான மக்கள் உணராததால், பலவித நோய்களுக்காட்களாகித் துன்பப்படுகின்றூர்கள்.

தூக்கம் என்பது படுக்கைக்குப் போவதுதான் என்று நினைப்பது பெருந் தவறு. தூக்கத்தால் நாம் பெறக் கூடும் நலன்கள் யாவும் தூங்கும் ஒழுங்கைப் பொறுத்துள்ளது. நாம் ஒரே தொடர்ச்சியாகத் தூங்குவதில்லை; விட்டு விட்டுத் தூங்குகிறோம்; கண்கள் மூடிச் செயலின்றிக் கிடக்கின்றன. ஆனல், அதே அமயம் மூளை வேலை செய்துகொண்டே இருக்-கின்றது.

நாம் அரைகுறையாகத் தூங்கும்போது முழு உட-லுக்கும் ஓய்வின்றிச் சில பாகங்கட்கு மட்டும் ஓய்வு உண்டாகிறது. அஃதாவது, கை, கால்கள் ஓய்வுடன் இருக்கையில், கழுத்திலும் முகத்திலும் உள்ள நரம்பு-கள் வேலை செய்துகொண்டே இருக்கின்றன. இவ்

விதமின்றி, எல்லா நரம்புகட்கும் எல்லா உறுப்புகட்-
கும் பூரண ஓய்வைத் தந்து தூங்குதல் வேண்டும். நாம்
மனத்தைச் சாந்தமாக வைத்துக்கொள்வதாலும் பக-
லில் நமக்கு நேர்ந்த நற்சம்பவங்களைப் பற்றியே சிந்-
திப்பதாலும் மனம் சாந்தமுற்று அமைதியான நித்திரை
உண்டாகும். கனவுகள் தோன்று. நரம்புகளும் உறுப்-
புகளும் ஓய்வைப் பெறும்.

உலகில் பெயர் பெற்ற தலைவர்களும் வசீகரத்
தோற்றமுள்ளவர்களும், உடல் வன்மை உள்ளவர்-
களும் அயர்ந்து நித்திரை செய்பவர்கள் என்பதை நாம்
மறக்கலாகாது. ஆதலின், இயற்கையாக ஏற்பட்டுள்ள
தூக்கத்துக்குரிய காலத்தில் ஒரு மணி நேரத்தையும்
நாம் வீணாக்கலாகாது. ஒரு மணி அல்லது இரண்டு
மணி நேரம் தூக்கத்தை இழந்தாலும், அஃது உடலில்
அதிக மாறுதலைச் செய்கின்றது.

சுருங்கக் கூறின், ஒருவன் கவலைகளை அடக்கி,
மனத்தை எப்போதும் தூய்மையாகவும் மகிழ்ச்சியா-
கவும் வைத்துக்கொள்வானாகில், அவன் தூங்கும்போது
தன்னை மறந்த நிலையில் இருப்பான்; அயர்ந்த தூக்கத்-
தால் உறுப்புகள் ஓய்வைப் பெறுகின்றன; மறு நாளைய
வேலைக்குத் தயாராக இருக்கின்றன. உடலில் நோய்
அணுகாது; உடல் உரம்பெறும்; மனம் மகிழ்ச்சியுறும்.

---

# 17. பசித் துன்பம்

உண்பதற்கு ஆகாரமில்லாமல் சோர்வடைந்த சீவர்களுக்குச் சீவகாருணியத்தால் ஆகாரங் கொடுக்க, உண்டு பசி நீங்கிய தருணத்தில் அந்தச் சீவர்களுக்கு அகத்தினிடத்தும் முகத்தினிடத்தும் தழைத்துப் பொங்கித் ததும்புகின்ற இன்பமும், அது கண்டபோது கொடுத்தவர்களுக்கு அகத்திலும் முகத்திலும் அவ்வாறுண்டாகின்ற இன்பமும் கடவுள் இன்பமென்று அறிதல் வேண்டும். வஸ்திரம், இடம், நிலம், பொருள் முதலானவைகள் இல்லாமல் துன்பப்படுகின்றவர்கள் அத்துன்பங்களை மன எழுச்சியால் சகித்துக்கொண்டு, உயிர் தரித்துத் தங்களாற் செய்யக் கூடிய முயற்சியைச் செய்யக் கூடும். பசியினால் துன்பம் நேரிட்டபோது மன எழுச்சியால் அத்துன்பத்தைச் சகித்துக்கொள்ளக் கூடாது. சகிக்கத் தொடங்கின், உயிரிழந்து விடுவார்கள். பசி நேரிட்டபோது பெற்றவர்கள் பிள்ளைகளை விற்றும், பிள்ளைகள் பெற்றவர்களை விற்றும், மனைவியைப் புருடன் விற்றும், புருடனை மனைவி விற்றும், அந்தப் பசியினால் வருந் துன்பத்தை மாற்றிக்கொள்ளத் துணிவார்களென்றால், அன்னியமாகிய வீடு, மாடு, நிலம், உடைமை முதலியவைகளை விற்றுப் பசியை நீக்கிக்கொள்வார்கள் என்பது சொல்ல வேண்டுவதில்லை. உலகம் முழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தியும் பசி நேரிட்டபோது தனது அதிகார உயர்ச்சி முழுவதும் விட்டு, தாழ்ந்த வார்த்தைகளால், 'என்ன செய்வது?' என்று அருகிலிருக்கிற அமைச்சர்களிடத்-

துக் குறை சொல்லுகிறான். பகைவரால் எறியப்பட்டு மார்பில் உருவிய பாணத்தையும் கையாற் பிடித்துக்கொண்டு எதிரிட்ட பகைவரை எல்லாம் அஞ்சாது ஒரு நிமிஷத்தில் வெல்லத் தக்க சுத்த வீரரும், பசி நேரிட்டபோது சௌரியத்தை இழந்து, பசிக்கு அஞ்சிப் பக்கத்தில் நின்றவரைப் பார்த்து, 'இளைப்பு வருமே; சண்டை எப்படிச் செய்வது?' என்று முறையிடுகின்றனர். இவ்வுலக போகங்களோடு இந்திர போகம் முதலிய போகங்களையும் துரும்பாக வெறுத்து முற்றுந் துறந்து, அறிவை அறிந்து அநுபவம் விளங்கிய ஞானிகளும், இறந்தோரையும் எழுப்பத் தக்க அளவிறந்த மகத்துவங்கள் விளங்கிய சித்தர்களும், முனிவர்களும் தபசிகளும் பசி நேரிட்டபோது தங்கள் தங்கள் அநுபவ இலட்சியங்களை விட்டு, அடுத்த ஊரை நோக்கிப் பலிக்கு வருகின்றார்கள்; பலி நேராதபோது நிலை கலங்குகிறார்கள். சொர்ப்பனத்தில் ஓர் இழிவு வரினும் அது குறித்து உயிர்விடத் தக்க மானிகளும், பசி நேரிட்டபோது சொல்லத் தகாதவரிடத்துஞ் சொல்லி மானங் குலைகின்றார்கள். சாதி சமய ஆசாரங்களில் அழுத்தமுடைய ஆசாரியர்களும், பசி வந்தபோது ஆசாரத்தை மறந்து ஆகாரத்திற்கு எதிர்பார்க்கின்றார்கள். கல்வி கேள்விகளில் நிரம்பி, அறிதற்கரிய நுட்பங்களை அறிந்து, செய்தற்கரிய செய்கைகளைச் செய்து முடிக்க வல்லவர்களும், பசி நேரிட்டபோது அறிவுங் கருத்தும் அழிந்து தடுமாறுகின்றார்கள். 'நாமே பெரியர்; நமக்குமேற் பெரியரில்லை' என்று இறுமாப்படைகின்ற அகங்காரிகளும், பசி நேரிட்டபோது

அகங்காரங் குலைந்து, ஆகாரங் கொடுப்பவரைப் பெரி-யவராகப் புகழ்கின்றார்கள். ஒரு வகைக் காரியங்களில் அநேக வகைகளாக உபசரிக்கச் செய்கின்ற இடம்பர்-களும், பசி நேரிட்டபோது இடம்பத்தை இழந்து மயங்குகின்றார்கள். இவரிவர் இப்படி இப்படியானால் ஒரு வகை ஆதாரமுமில்லாத ஏழைகள் பசி நேரிட்ட-போது என்ன பாடுபடார்கள்! அந்தக் காலத்தில் அந்த ஏழைகளுக்கு ஆகாரங் கிடைத்தால் எப்படிப்பட்ட சந்தோஷம் உண்டாகும்! அந்தச் சந்தோஷத்தைத் தோற்றுவித்தவர்களுக்கு எப்படிப்பட்ட இலாபம் கிடைக்கும்! இப்படிப்பட்டதென்று சொல்லுதற்கு அருமை என்று அறிதல் வேண்டும்.

சீவர்களுக்குப் பசி அதிகரித்த காலத்தில் சீவ அறிவு விளக்கமில்லாமல் மயங்குகின்றது. அது மயங்-கவே அறிவுக்கறிவாகிய கடவுள் விளக்கம் மறைபடு-கின்றது; குணங்களெல்லாம் பேதப்படுகின்றன; மனம் தடுமாறிச் சிதறுகின்றது, புத்தி கெடுகின்றது, சித்தம் கலங்குகின்றது, அகங்காரம் அழிகின்றது; பிராணன் சுழல்கின்றது, பூதங்களெல்லாம் புழுங்கு-கின்றன, வாத பித்த சிலேத்துமங்கள் நிலைமாறுகின்-றன, கண் பஞ்சடைந்து குழிந்து போகின்றது, காது கும்மென்று செவிடு படுகின்றது, நா உலர்ந்து வறளு-கின்றது, நாசி குழைந்து அழல்கின்றது, தோல் மெலிந்து ஸ்மரணை கெடுகின்றது, கை கால் சோர்ந்து துவளுகின்றன, வாக்குத் தொனி மாறிக் குழறுகின்-றது; பற்கள் தளருகின்றன, மேனி குறுகுகின்றது, உரோமம் வெறிக்கின்றது, நரம்புகள் குழைந்து நைகின்-

றன, நாடி கட்டுவிட்டுக் குறைகின்றன, எலும்புகள் கருகிப் பூட்டுகள் நெக்குவிடுகின்றன, இருதயம் வேகின்றது, மூளை சுருங்குகின்றது, ஈரல் கரைகின்றது, இரத்தமுஞ் சலமுஞ் சுவறுகின்றன, மாமிசம் குழைந்து தன்மை கெடுகின்றது, வயிறு பகீரென்று எரிகின்றது, தாப சோபங்கள் மேன்மேலும் உண்டாகின்றன. உயிரிழந்து விடுவதற்கு மிகவும் சமீபித்த அடையாளங்களும் அநுபவங்களுந் தோன்றுவது சீவர்களுக்கெல்லாம் பொதுவாகவே இருக்கின்றன. இவ்வளவு அவத்தைகளும் ஆகாரங் கிடைத்த போது நீங்குகின்றன. அப்போது தத்துவங்கள் எல்லாம் தழைத்து உள்ளங் குளிர்ந்து அறிவு விளங்கி, அகத்திலும் முகத்திலும் சீவ களையும் கடவுள் களையும் துளும்பி, ஒப்பில்லாத திருப்தியின்பம் உண்டாகின்றது. இப்படிப்பட்ட இன்பத்தை உண்டுபண்ணுகின்ற புண்ணியத்துக்கு எந்தப் புண்ணியத்தை இணையென்று சொல்லலாம்! இந்தப் புண்ணியத்தைச் செய்கின்ற புண்ணியர்களை எந்தத் தெய்வத்துக்குச் சரியென்று சோல்லலாம்! எல்லாத் தெய்வங்களுக்கும் மேலாகிய கடவுள் அம்சமேன்றே சத்தியமாக அறிய வேண்டும். இதனால் நரக வேதனை, சனன வேதனை, மரண வேதனை என்கின்ற மூன்று வேதனைகளுங் கூடி முடிந்த வேதனையே பசி வேதனை என்றும், அகம் புறம் - நடு கீழ்மேல் பக்கம் என்கின்ற எவ்விடத்தும் நிறைந்து, எக்காலத்தும் வேறுபடாத மோக்ஷ இன்பமே ஆகாரத்திலுண்டாகும் திருப்தி இன்பமென்றும் அறியப்படும்.

—இராமலிங்க அடிகள்

# 18. சீவ காருணியம்

பசி இல்லாவிடில் சீவர்கள் ஆகாரங் குறித்து ஒரு-வரை ஒருவர் எதிர் பார்க்கமாட்டார்கள். எதிர் பாராத பக்ஷத்தில் உபகாரச் செய்கை தோன்றாது. அது தோன்றாத போது சீவ காருணியம் விளங்காது. அது விளங்காதபோது கடவுளருள் கிடைக்கமாட்-டாது. ஆதலால், பசியும் கடவுளாற் கொடுக்கப்பட்ட ஓர் உபகாரக் கருவியென்றே அறிதல் வேண்டும். பசியி-னால் துன்பப்படுகின்றவர் ஆகாரத்தைக் கண்ட காலத்-தில் அடைகின்ற சந்தோஷமும் தாய் பிதா பெண்டு பிள்ளை காணி பூமி பொன் மணி முதலானவைகளைக் கண்ட காலத்திலும் அடையார்களாயின், ஆகாரம் உண்ட காலத்தில் உண்டாகுஞ் சந்தோஷம் எப்படிப்-பட்டதாக இருக்கும்! பசி என்கிற நெருப்பானது ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்ற போது ஆகா-ரத்தால் அவிக்கின்றதுதான் சீவ காருணியம் பசி என்கிற விஷக் காற்றானது ஏழைகளின் அறிவாகிய விளக்கை அவிக்கின்ற தருணத்தில் ஆகாரங் கொடுத்து அவியாமல் ஏற்றுகின்றதே சீவ காருணியம். கடவுளி-யற்கை விளக்கத்திற்கு இடமாகிய சீவ தேகங்களென்-கிற ஆலயங்கள் பசியினால் பாழாகுந் தருணத்தில் ஆகாரங் கொடுத்து, அவ்வாலயங்களை விளக்கஞ் செய்விப்பதே சீவ காருணியம். கடவுளின்பத்தைப் பெறுகின்ற நிமித்தம் தேகங்களிலிருந்து குடித்தனஞ் செய்கின்ற சீவரது தத்துவக் குடும்பமுழுதும்,பசியினால் லை தடுமாறி அழியுந் தருணத்தில் ஆகாரங் கொடுத்து

அக்குடும்ப முழுதும் நிலைபெறச் செய்வதே சீவ காருணியம். பசி என்கிற புலியானது ஏழை உயிர்களைப் பாய்ந்து கொல்லத் தொடங்கும் தருணத்தில் அப்புலியைக் கொன்று, அவ்வுயிர்களை இரட்சிப்பதே சீவ காருணியம். பசி என்கிற விஷந் தலைக்கேறிச் சீவர்கள் மயங்குந் தருணத்தில் ஆகாரத்தால் அவ்விஷத்தை இயக்கி, மயக்கந் தெளியச் செய்வதே சீவ காருணியம். பசி என்கிற கொடுமையாகிய தேள் வயிற்றிற் புகுந்து கொட்டுகின்ற போது கடுப்பேறிக் கலங்குகின்ற ஏழைகளுக்கு, ஆகாரத்தால் அக்கடுப்பை மாற்றிக் கலக்கத்தைத் தீர்ப்பதே சீவ காருணியம். 'நேற்று இராப் பகல் முழுவதும் நம்மை அரைப்பங்கு கொன்று தின்ற பசி என்கிற பாபி இன்றும் வருமே! இதற்கு என்ன செய்வோம்?' என்று ஏக்கங் கொள்கின்ற ஏழைச் சீவர்களது ஏக்கத்தை நீக்குவதுதான் சீவ காருணியம். 'வெயிலேறப் போகின்றதே, இனிப் பசி என்கிற வேதனை வந்து சம்பவிக்குமே, இந்த விதிவசத்திற்கு என்ன செய்வது?' என்று தேனில் விழுந்த ஈயைப் போலத் திகைக்கின்ற ஏழைச் சீவர்களுடைய திகைப்பை நீக்குவதுதான் சீவ காருணியம். 'இருட்டிப்போகின்றதே! இனி ஆகாரங் குறித்து எங்கே போவோம்? யாரைக் கேட்போம்? என்ன செய்வோம்?' என்று விசாரத்தில் அழுந்திய ஏழைச் சீவர்களது விசாரத்தை மாற்றுவதே சீவ காருணியம். 'நடந்து நடந்து காலுஞ் சோர்ந்தது, கேட்டுக் கேட்டு வாயும் நொந்தது; நினைந்து நினைந்து மனமுஞ் சலித்தது; இனி, இப்பாழ் வயிற்றுக்கென்ன செய்-

வோம்?' என்று கண்ணீர் வடிக்கின்ற ஏழைகளுக்கு ஆகாரங்கொடுத்துக் கண்ணீரை மாற்றுவதே சீவ காருணியம். 'பகற்போதும் போய் விட்டது; பசியும் வருத்துகின்றது; வேறிடங்களிற் போக வெட்கந் தடுக்கின்றது; வாய் திறந்து கேட்க மானம் வலிக்கின்றது; வயிறு எரிகின்றது; உயிரை விடுவதற்கும் உபாயந் தெரியவில்லை; இவ்வுடம்பை ஏன் எடுத்தோம்!' என்று, மனமும் முகமுஞ் சோர்ந்து சொல்வதற்கு நாவெழாமல் உற்பாத சொர்ப்பனங் கண்ட ஊமையைப் போல மன முருகுகின்ற மானிகளாகிய சீவர்களுக்கு ஆகாரங் கொடுத்து மானத்தைக் காப்பதுவே சீவ காருணியம். 'நாம் முன் பிறப்பில் பசித்தவர்கள் பசிக்குறிப்பு அறிந்து பசியை நீக்கி இருந்தால், இப்பிறப்பில் நமது பசிக் குறிப்பு அறிந்து பசியை நீக்குவதற்குப் பிறிதொருவர் நேர்வார்; அப்போது அப்படி நாம் செய்ததில்லை; இப்போது நமக்கிப்படிச் செய்வாருமில்லை' என்று விவகரித்துக்கொண்டு தூக்கம் பிடியாமல் துக்கப்படுகின்ற ஏழைச் சீவர்களுக்கு ஆகாரங் கொடுத்துத் துக்கத்தை நீக்கித் தூக்கம் பிடிக்கவைப்பதே சீவகாருணியம். தேகமுழுவதும் நரம்புகள் தோன்றப் பசியினால் இளைத்து உயிர் ஒடுங்கி மூர்ச்சை வந்த காலத்து, அயலாரைக் கேட்கத் துணியாமற் கடவுளை நினைந்து நினைந்து, நெருப்பிற் படுத்து நித்திரை செய்யத் தொடங்குவாரைப் போல அடிவயிற்றிற் கொடிய பசி நெருப்பை வைத்துப் படுக்கத்தொடங்குகின்ற விவேகிகளுக்கு ஆகாரங் கொடுத்து, அந்தப் பசி நெருப்பை ஆற்றுவிப்பதே சீவ காருணியம். 'நேற்றுப் பட்டினி

கிடந்ததுபோல் இன்றும் பட்டினி கிடப்பது எப்படி? நாம் வாலிப வலிவால் இன்றும் பட்டினி கிடக்கத் துணிவோமாயினும் பட்டினிக்குச் சகியாத நமது ஏழை மனைவி வயிற்றுக்கு யாதுசெய்வோம்? இவள் பசியைக் குறிப்பது பெரிதன்று; வயோதிக தசையால் மிகவுஞ் சோர்ந்த நம் தாய் தந்தையர் இன்றும் பட்டினி கிடந்தால் இறந்துவிடுவரே! இதற்கென்ன செய்வோம்? பசியினால் அழுதழுது களைத்த நமது புத்திரர்களது சோர்ந்த முகத்தை எப்படிப் பார்ப்போம்?' என்று எண்ணி எண்ணிக் கொல்லன் உலையில் ஊத மூண்ட நெருப்பைப் போலப் பசி நெருப்பும் பய நெருப்பும் விசார நெருப்பும் உள்ளே மூண்டபடி இருக்கக் கன்னப்புடையில் கைகளை வைத்துக்கொண்டு, கண்களில் நீர் கலங்க வருந்துகின்ற ஏழைகளுக்கு ஆகாரங் கொடுத்து, வருத்தத்தை மாற்றுவதே சீவ காருணியம். 'கண், கை, கால் முதலிய உறுப்புக்களிற் குறைவில்லாதவர்களாகி, ஆகாரஞ் சம்பாதிக்கத் தக்க சக்தி யுள்ளவர்களும் பசியால் வருந்தி இதோ படுத்திருக்கின்றார்கள்; குருடும், செவிடும், ஊமையும், முடமுமாக இருக்கின்ற நமக்கு ஆகாரம் எந்த வழியாற் கிடைக்கும்? பசி எப்படி நீங்கும்?' என்று தனித்தனி நினைந்து நினைந்து துக்கப்படுகின்ற ஏழைகளுக்கு ஆகாரங் கொடுத்துத் துக்கத்தை நீக்குவதே சீவகாருணியம். பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும் எந்தச்சமயத்தாராயினும் எந்தச்சாதியாராயினும் எந்தச் செய்கையாராயினும் அவர்கள் தேச ஒழுக்கம், சமய ஒழுக்கம், சாதி ஒழுக்கம், செய்கை ஒழுக்கம்

முதலானவைகளைப் பேதித்து விசாரியாமல், எல்லாச் சீவர்களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாய் விளங்குவதை அறிந்து பொதுவாகப் பார்த்து, அவரவர் ஒழுக்கத்திற்குத் தக்கபடி அவர்கள் பசியை நிவர்த்தி செய்விப்பதே சீவ காருணியம். சன்மார்க்க ஒழுக்கத்திற்கு ஒத்த சத்துவஆகாரத்தால் பசி நிவர்த்தி செய்துகொள்ளத் தக்க மிருகம், பறவை, ஊர்வன, தாவரம் என்கின்ற உயிர்களுக்குப் பசி வந்தபோது அதை நிவர்த்தி செய்விப்பதே சீவ காருணியம்.

—இராமலிங்க அடிகள்

---

## 19. முன்னேற்றம்

1. *தன்னைத்தான் முன்னேற்றுகின்ற ஒருவன், தன்நாட்டையும் முன்னேற்ற நிலைக்குக் கொண்டு வருபவனாகின்றான்.*

—பண்டித மாளவியா

2. *அறிவுள்ளவன் முன்னேற்றம் அடைகின்றான்.*

—இரவீந்திர நாத தாகூர்

முன்னேற்றம் என்பது தாழ்ந்த நிலையிலிருந்து மேனிலையை அடைதல் என்பது பொருள். இப்பொருள் ஒரு மனிதனுக்கோ, ஒரு சமூகத்துக்கோ, ஒரு நாட்டுக்கோ, உலகத்துக்கோ கூறுதல் பொருந்தும். பிற நாடுகள் அடைந்துள்ள முன்னேற்றத்தை ஆராய்ந்தால், நம் நாடு அவற்றை விட மிகக் கேவல நிலையில் இருப்பதை உணரலாம்.

ஒரு நூற்றாண்டுக்கு முன்னர், இருந்த இடம் தெரியாதிருந்த ஜப்பான், இன்று உலக வல்லரசுகளுள் ஒன்றாக விளங்குகின்றது. எல்லாத் துறைகளிலும்

ஜப்பான் ஐரோப்பிய வல்லரசுகளுடன் போட்டியிடு-கின்றது. ஜப்பானியர் கைத்தொழிலைக் கண்டு இங்கி-லாந்தும் பிரமிக்கின்றது. நாட்டுப் பற்றிலும், நவீன யுத்த முறைகளிலும் மேனுடுகளைப் போலவே ஜப்பான் முன்னேற்றம் அடைந்துள்ள நாடு என உலக மக்களால் பாராட்டப்படுகின்றது. இந்நாடு இத்தகைய முன்-னேற்றம் பெறக் காரணம் என்?

பதினெட்டாம் நூற்றாண்டில் ஜப்பான் நாடு போர்ச்சுகீசியரால் கண்டுபிடிக்கப்பட்டது. நாளடை-வில் மேனுட்டார் அங்குக் குடியேறி வர்த்தகம் செய்ய-லாயினர்; பின்னர், வர வர ஜப்பானியரைக் கொடுமைப் படுத்தலாயினர். மேனுட்டாரின் கொடுமைகளைப் பொறுக்க இயலாமல், ஜப்பானியர் பலர் அவர்களை எதிர்த்தனர். பின்னர், இவ்வெதிர்ப்பில் ஜப்பானியர் ஒன்றுபட்டனர். ஜாப்பானியர் ஒன்றுபட்டதைக்கண்ட மேனுட்டார் அவர்களோடு சமரசஞ் செய்துகொண்டு வியாபாரம் நடத்தி வந்தனர். கிறிஸ்தவப் பாதிரிமார் ஜப்பானில் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பினர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சில அமெரிக்க வர்த்தகர் யுத்தக் கப்பல்களுடன் ஜப்பானை அணுகினர்; தம்முடன் வாணிகஞ் செய்துவர வேண்டு மென்றும், இன்றேல், ஜப்பானை அழித்துவிடுவதாகவும் அச்சுறுத்தினர். தங்கள் எளிய நிலைமை எண்ணி ஜப்பானியர் அமெரிக்கரோடு வாணிகம் புரிய இசைந்-தனர். என்றாலும், ஜப்பானியர் அமெரிக்கர் இழைத்த அவமானத்தை மறந்திலர்; அன்று முதல் புத்துணர்ச்சியைப் பெற்றனர். 'எங்கள் நாடு,

இதனைக் காக்க வேண்டும்' என்ற எண்ணம் அப்போதே ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிந்தது. அதனால், அவர் அதுவரையில் தமக்குள் இருந்த வேற்றுமைகளை அறவே மறந்தனர்; சமத்துவத்தையும் சகோதரத்வத்தையும் பெற்றனர். ஊக்கமும் உழைப்-புங் கொண்டனர்; வாணிகத்தையும் விவசாயத்தையும் விருத்தியாக்க முயன்றனர்; ஒவ்வொரு துறையிலும் மேனாட்டாரைப் பின்பற்றத் தொடங்கினர்.

நம் நாட்டைப் போலவே ஜப்பானிலும் சமூக வேற்றுமைகள், சாதி வேறுபாடுகள், முதலியன மல்கி இருந்தன. ஆனால், 'எங்கள் தாய்நாடு, அதனை எவ்விதத்தும் காப்பாற்றல் வேண்டும்' என்ற உணர்ச்சி தோன்றியதும், எல்லா வேற்றுமைகளும் இருந்தவிடம் தெரியாமல் மறைந்தன. 'யாவரும் ஓர் இனத்தவர்-தாய்நாட்டு மக்கள்—சகோதரர்' என்ற முன்னேற்ற உணர்ச்சி ஜப்பானில் வேரூன்றியது. அன்று முதல் அந்நாட்டு மக்கள் உழைக்கலாயினர்; பெருஞ் செல்வர் யாவரும் தாம் அதுவரையில் பெற்றிருந்த அதிகாரங்-களை மனமுவந்து ஜப்பான் சக்கரவர்த்திக்கு அளித்த-னர். போர் வீரர் சக்கரவர்த்தியின் சொற்கேட்க ஆரம்-பித்தனர். வாலிபர் அனைவரும் நாட்டு நலத்துக்கெனத் தொண்டு செய்யலாயினர்; மேனாட்டுப் போர் வீரரைப் போலத் தாமும் போர் வீரராகப் பயிற்சி பெற்றனர்; வாட்போர், மற்போர் முதலிய போர் வகைகளில் தேர்ச்சியுற்றனர்.

கல்வி கற்ற இளைஞர், பெண்களை முன்னணிக்குக் கொண்டுவர முயன்றனர்; பல சங்கங்களைத் தாபித்துப்

பெண்கள் நலத்துக்கெனப் பாடுபட்டனர். கல்வி கற்ற பெண்டிர், பிற பெண்கள் இருக்குமிடஞ் சென்று அவர்களுக்குக் கல்வி கற்பித்தனர். பெண்டிரும் ஆட-வரைப் போல உத்தியோகம் செய்வதிலும் தொழில் முறையிலும் ஈடுபட்டனர்; தமது முன்னேற்றத்துக்-கெனப் பல பத்திரிகைகளை நடத்தினர்; இன்றும் நடத்தி வருகின்றனர்.

மேனாடுகளைப் போல ஜப்பானும் தன் இராணுவத்-தைப் பெருக்கிக்கொண்டது. ஜப்பானியர் இராணு-வத்தைத் தம் உயிர்போலக் கருதுகின்றனர். ஜப்பா-னுக்கு வேண்டும் உணவுப் பொருள்கள் யாவும் வெளி நாடுகளிலிருந்தே இறக்குமதியாகின்றன. இவை செல்லத் தடைப்படுமாயின், ஜப்பான் துன்பப்பட நேரிடும். ஆதலின், இவை வரும் வழியைக் காப்பதே ஜப்பானிய இராணுவத்தின் முதற்கடமையாகும் இவையன்றி, ஜப்பானில் உள்ள பெரிய தொழிற்சாலை-கட்கு வேண்டும் இரும்பு, நிலக்கரி, பஞ்சு, கம்பளம், தேக்கு முதலியவை வெளி நாடுகளிலிருந்து இறக்கு-மதியாகின்றன. துணி வகைகள், நெருப்புப் பெட்டி-கள், பீங்கான் சாமான்கள், கண்ணாடிப் பாத்திரங்கள் முதலான பல வகைப்பட்ட பொருள்கள் இந்தியா முதலான வெளி நாடுகளுக்கு ஜப்பானிலிருந்து இறக்-குமதி ஆகின்றன. இவ்வேற்றுமதி இறக்குமதிப் பொருள்கள் செல்கின்ற வழியையும் வருகின்ற வழி-யையும் ஜப்பானிய இராணுவம் பாதுகாக்கின்றது.

ஏறக்குறைய நம் தாய் நாட்டில் ஐந்தில் ஒரு பாகமுள்ள ஜனத்தொகையைக் (6½-கோடி) கொண்ட

ஜப்பான், தன் இடைவிடா உழைப்பாலும், கைத்-தொழில்களாலும், வாணிகத்தாலும், இராணுவ பலத்தாலும் வர வர மிக்க முன்னேற்ற நிலையை அடைந்து வருகின்றது.

செழிப்பில்லாத கழனிகளில் முக மலர்ச்சியோடு ஜப்பானியர் உழைத்துப் பயிரிடுவது போற்றத் தக்கது. நாட்டில் எரி மலைகள் இருப்பதால், பூகம்பம் உண்டா-கிப் பெருஞ் சேதம் உண்டாவதும் உண்டு. அவ்வா-றிருந்தும், உழைப்பையே உயிர்நாடியாக மதித்துள்ள ஜப்பானியர், அழிந்த தமது தாய்நாட்டை மீண்டும் செவ்வைப்படுத்துகின்றனர். அவர்களைப் போல உண்மையாக உழைக்கும் நாட்டினர் இலர் என்றே கூறலாம். அந்நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் எழுதப் படிக்கத் தெரியும் (நம் நாட்டில் நூற்றுக்கு 8 பேருக்கே எழுதப்படிக்கத் தெரியும்). அவர்கள் அவ-சியமின்றிப் புன்னகை புரியமாட்டார்கள்; வீணான காரியங்களில் தலையிடமாட்டார்கள். தங்கள் தாய்-நாடு முன்னேற்ற நிலையில் இருக்க வேண்டுமென்பதே அவர்கள் பிரார்த்தனையாகும்.

ஆகவே, அன்புள்ள பிள்ளைகளே! முன்னேற்றம் என்பது ஒவ்வொரு துறையிலும் மேனிலையை அடை-தல் என்பது பொருளாகின்றதல்லவா? ஜப்பானியர் எங்ஙனம் ஒவ்வொரு துறையிலும் முன்னேற்றம் அடைந்துள்ளனர் என்பதை மீண்டும் மீண்டும் எண்ணிப் பாருங்கள்: அவர்களைப் போல நீங்களும் நம் தாய்நாட்டை முன்னேற்ற நிலைக்குக் கொண்டு-வருவீர்களா?

---

## 20. உழைப்புக்கே உயர்வு

1. *உழைப்பினுல் ஒருவன் உயர்வடைகின்முனே அன்றிப் பிறப்பினுல் இல்லை.*

—சர். பி. சி. ரே

*உழைப்பினுல் உயர்வடையும் எவனையும் மேனுட்டார் மகிழ்ச்சியோடு வரவேற்கின்றனர். உலகெலாம் புகழும் உயர்நிலையில் இருந்தவர்களும் இருப்பவர்களுமான பெருமக்களிற் பலர், ஆரம்பத்தில் மிகத் தாழ்ந்த வேலையைச் செய்துகொண்டிருந்தவரே ஆவர். அவர்தம் வரலாறுகள் உங்களுக்குப்பெருவியப்பை அளித்து, 'உழைப்பு ஒன்றுக்கே உயர்வுண்டு' என்னும் உயர்ந்த நோக்கத்தை உண்டாக்குமாதலின், அவற்றுட் சிலவற்றை ஈண்டுக் கூறுகின்றேன் :*

### லாயிட் ஜார்ஜ்

*இவர் ஓர் எளிய குடும்பத்திற் பிறந்தவர். இவர் மூன்று வயது சிறுவராக இருந்தபோது, இவர் தந்தையார் காலமானுர். எனவே, இவர், ஒரு கிராமத்தில் செருப்புத் தைத்துப் பிழைத்துக்கொண்டிருந்த தம் தாய் மாமனிடம் வளர்ந்து வந்தார். அவரது உதவியால் இவர் கிராமப் பள்ளியிற் படித்துத் தேறிஞர் ; பின்னர், வக்கீல் குமாஸ்தாவுக்கு வேண்டிய கல்வியைக் கற்று, வக்கீல் குமாஸ்தாவாஞர் ; அவ்வேலையில் இருந்துகொண்டே ஊக்கத்துடன் வக்கீல் வேலைக்கு வருந்திப் படித்துத் தேர்ச்சியுற்று வக்கீலாஞர் ; வெகு விரைவில் தமது தொழிலில் பிரசித்தியடைந்து, சொல்லாற்றலிற் சிறந்து விளங்கினுர். பின்னர், இவர் அரசியல் விவ-*

காரங்களில் கலந்து, தந்நம்பிக்கையாலும் சலியா உழைப்பாலும் அரும்பாடுபட்டுப் பாராளுமன்றத்தில் (Parliament) அங்கத்தினரானார்; பின்னர், பிரிட்டிஷ் சாம்ராச்சியத்தின் பிரதம மந்திரியாரானார். இன்று உல-கில் உள்ள பேராற்றல் வாய்ந்த சொற்பொழிவாளர்-களில் இவர் ஒருவராக விளங்குதல் குறிப்பிடத்தக்கது.

### தாமஸ் மாசரிக்

இவர் மிக எளிய குடும்பத்திற் பிறந்தவர். தமது பதின்மூன்றாம் வயதில் பள்ளி இறுதித் தேர்வுக்குச் செல்லப் பணமின்றி மூன்றாண்டுகள் இவர் காத்திருக்க நேர்ந்தது. அக்காலத்தில் இவர் கொல்லச் சிறுவனாக-வும், செருப்புத் தைப்பவனாகவும், பிணம் புதைப்-பவனாகவும் கோவிலிற் பாடுவோனாகவும் இருந்து கொண்டே பிரஞ்சு மொழியைக் கற்றுத் தேர்ந்தார்; வேறு பல மொழிகளிலும் சிறந்த பயிற்சி பெற்றார். பின்னர் இவர், வியன்னா நகரத்துக்குச் சென்று, பரீட்-சையில் தேறி, ஓர் இராப்பள்ளிக்கூடத்தில் ஆசிரிய-ரானார்; சில ஆண்டுகள் கழிந்த பின்னர்க் கல்லூரி ஒன்றில் பேராசிரியர் பதவியை ஏற்றுப் பல நூல்களை எழுதினார்; பல அரிய பிரசங்கங்கள் செய்தார்; தம் தாய்நாடான ஜெக்கோஸ்லோவேகியாவின் அபிவிருத்-திக்குப் பெரிதுழைத்தார். அதன் பயனாக, இவர், இன்று அந்நாட்டின் குடியரசுத் தலைவராக விளங்கி வருகின்றார்.

### ஆர்தர் மக்னமரா

இவர் இங்கிலாந்தில் பர்மிங்ஹாமில் இருந்த ஓர் ஏழைக் குடியிற் பிறந்தவர். இவர் பதினொரு வயது-

டைய சிறுவராக இருக்கையில் இவர் தந்தையார் காலமானர். எனவே, இவர், தாயையும் தம்பியையும் மூன்று தங்கைகளையும் காப்பாற்ற வேண்டியவரானர். பாவம்! சில நாட்கள் வரையில் இவரும் மற்றவரும் பட்டினியாகவே இருந்தனர். பின்னர், இவர் ஒரு கசாப்புக் கடைக்காரரிடம் வேலையில் அமர்ந்தார். கடையிலிருந்து இறைச்சியை வழக்கமாக வாங்குவோரின் இல்லங்கட்கு எடுத்துச் செல்வதே இவரது வேலையாகும். இவ்வேலை போக எஞ்சிய நேரங்களில் இவர் ஊக்கத்துடன் பள்ளியிற் படித்து வந்தார்; சாப்பாட்டிற்கு விட்ட நேரங்களில் நகரத்தின் பல பாகங்களிலுமுள்ள தொழிற்சாலைகளின் வாயில்களில் நின்று யாசகங் கேட்டு வந்தனர். இவரது தாழ்ந்த நிலையைக் கண்டு இரங்கிய தொழிலாளிகள் இவருக்கு ரொட்டித் துண்டுகளைக் கொடுப்பது வழக்கம். இவர் அவற்றை எடுத்துக்கொண்டு தம் வீடு சென்று, பட்டினியாற் பரிதவிக்கும் தாய்க்கும் தம்பிக்கும் தங்கைகளுக்கும் கொடுத்து மகிழ்வது வழக்கம்.

மக்னமரா பதின்மூன்ரும் வயதில் கலாசாலையை விட்டார்; அது முதல் நூற்றைம்பது இடங்களில் வேலை பார்த்தார்; அவ் வேலைகளில் இவர் அடைந்த இன்னல்கள் மிகப் பலவாம். முடிவில் 1924-ஆம் ஆண்டில் ஆகாயத் தந்தியைப் பற்றி யோசித்து, தம்மிடம் இருந்த நாற்பத்தெட்டுப் பொன்னை மூலதனமாகக் கொண்டு, மிகச் சிறிய அளவில் மின்சாரத் தொழிற்சாலையொன்றை ஏற்படுத்தினர். ஆகாயத் தந்திக்குரிய கருவிகளைச் செய்து விற்பதே இவரது வேலையாகும்.

முதலில் இரண்டு பேரைக் கொண்டு ஆரம்பித்து அத்தொழிற்சாலை நாளடைவில் மிக்க முன்னேற்றமடைந்தது; 1925-ஆம் ஆண்டில் 500 பொன் லாபங் கிடைத்தது. 1926-ல் 900 பொன்னும், 1928-ம் 3500-ம், 1930-ல் பதினோராயிரம் பொன்னும் 1932-ல் 1,90,000 பொன்னும் லாபங் கிடைத்தது. இப்பொழுது இவரது தொழிற்சாலை மிகப் பெரிதாக மாறியுள்ளது. அதில் மூவாயிரம் தொழிலாளர் வேலை செய்கின்றனர். ஒவ்வொரு நாளும் ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கும் இயந்திரங்கள் ஒரு நாளில் இரண்டரை லட்சம் கருவிகளைச் செய்து குவிக்கின்றன.

கசாப்புக் கடையில் இருந்த மக்னமரா—தொழிற்சாலைகளின் வாயிலில் நின்று யாசித்த மக்னமரா—இன்று இங்கிலாந்தில் செல்வச் சீமானாக விளங்குகின்றார்.

### செருப்பரசர்—தாமஸ் பாட்டா

உலகெலாம் செருப்பரசர் எனப் புகழத் தக்க உயர் நிலையில் இருந்த இவர், ஜெக்கோஸ்லோவேகியா நாட்டைச் சேர்ந்தர்வர்; செருப்புச் செய்து வந்த தாய் தந்தையர்க்குப் பிறந்தவர். இவர் சிறுவராக இருக்கையில், வீட்டுக்கு வீடு சென்று, தம் பெற்றோர் செய்து முடித்த செருப்புகளை விற்று வந்தார். நாளடைவில் தொழில் விருத்தியடையவே, இவர் பெரிய செருப்புத் தொழிற்சாலைக்குத் தலைவராகி, உலகிலேயே செருப்புத் தொழில் செய்வோருட் சிறந்தவராகிச் செருப்பரசர் எனப் பெயர் பெற்றார். இவர் தொழிற்சாலைகள் உள்ள இடம் ஒரு பெரிய நகரமாகும். இவர் தொழிற்சாலை-

களில் வேலை செய்யும் ஆயிரக் கணக்கான தொழிலாளி-கள் அங்கு வசிக்கின்றார்கள். அவர்கள் இவரால் அளிக்கப்பட்டுள்ள வீடுகளில் இருக்கின்றார்கள்; இவ-ரால் நடத்தப் பெறுகின்ற சாப்பாட்டு விடுதிகளில் சாப்பிடுகின்றார்கள்; இவரால் நடத்தப் பெறும் சினி-மாக்களுக்குச் சென்று களிக்கின்றார்கள்.

செருப்பு வைக்கப்படும் அட்டைப் பெட்டிகளும், காகிதமும் இவர் தொழிற்சாலைகளிலேயே செய்யப்படு-கின்றன. ஆண்டுதோறும் உலகில் உள்ள எல்லா மொழிகளிலும் கேடலாக் (Catalogue) அச்சிடப் பெறுகின்றது. இவருடைய தொழிற்சாலைகளில் ஒரு நாளில் பல்லாயிரக் கணக்கான செருப்புகளும் மிதியடிகளும் செய்யப்படுகின்றன.

தாமஸ் பாட்டா உலகமெங்கும் சுற்றுபவர். இவர் 1931-ஆம் ஆண்டில் காலமானார். இப்போது இவர் வேலையை இவர் புதல்வர் பார்த்து வருகின்றார். இவர் தம் வியாபாரத்தை முன்னிட்டு ஒரு நாட்டி-லிருந்து பிறிதொரு நாட்டுக்கு ஆகாய விமானத்திற்றான் செல்கின்றார். பத்து ஆகாய விமானங்கள் இவருக்குச் சொந்தமாக இருக்கின்றனவெனின், இச்செருப்பரச-ரின் வாணிபச் சிறப்பை என்னென்பது!

ஸ்டாலின்

நவீன இரஷியாவின் சர்வாதிகாரியாக விளங்கி வருபவரான ஸ்டாலின் என்பவர், ஓர் ஏழைச் சக்கிலி-யின் புதல்வராவர். இவர் சிறு வயதில் செருப்புத் தைத்துப் பிழைத்து வந்தவர்; எனினும், உழைப்பை மேற்கொண்டு கல்விகற்று, அரசியல் நடவடிக்கைகளில்

கலந்து, அரசியல் முன்னேற்றத்துக்கு மிகவும் பாடு-பட்டார்; முடிவில் சோவியத் அரசாங்கத் தலைவரானார். இன்று இரஷியா முழுவதும் இவரது சொற்கேட்டு நடந்து வருவது குறிப்பிடத் தக்கது.

## மாக்பர்சன் இராபர்ட்ஸன்

இவர் மிகவும் ஏழைக்குடும்பத்திற் பிறந்த ஆங்கி-லேயர்; இளமைப் பருவத்தில் வயிற்றுச் சோற்றுக்கு மிக வருந்தி உழைத்தவர்; சகிக்க முடியா இன்னல்களி-லும் சிறிது கல்வி கற்று, சிறிது காலம் நாவிதத் தொழில் செய்து பிழைத்தார். பின்னர், இவர் ஆஸ்ட்ரேலியா-வுக்குச் சென்று, அங்குப் பலவித வேலைகளைச் செய்து பிழைத்தார்; முடிவில், பொம்மைகளைப் போன்ற வேடிக்கையான மிட்டாய்களைச் செய்து விற்று அத் தொழிலில் மிக்க முன்னேற்றம் அடைந்தார்; மிட்டாய் செய்யும் மிகப் பெரிய தொழிற்சாலையை வைத்தார். அதில் இன்று 2600 தொழிலாளர் வேலை செய்து வருகின்றனர். ஆ! உழைப்பளிக்கும் உயர்வுதான் என்ன !

## ஆண்ட்ரூ கார்னகி

இவர் ஸ்காட்லண்ட் தேசத்தில் ஓர் எளிய குடும்-பத்திற் பிறந்தவர். இவர் சிறுவராக இருக்கையில் இவர் பெற்றோர் அமெரிக்காவை அடைந்து, வறுமை-யாற் சொல்லொணாத் துன்பங்களை அடைந்து வாட்ட முற்றனர். இவர் தாயார் சில்லரைச் சாமான்களை விற்றுக்கொண்டும் செருப்புகளைப் பழுது பார்த்துக்-கொண்டும் இருந்தார்; தந்தையார் நெசவு வேலை செய்துகொண்டிருந்தார். கார்னகி சிறிது கல்விகற்றுத்

தந்தையாருடன் நெசவு வேலையிற் சிறிது காலம் இருந்தார்; பின்னர்த் தந்திச் செய்திகளைக் கொண்டுசெல்லும் சிறுவராக இருந்தார்; பிறகு, தந்தி அடிக்கக் கற்று ஒருவரிடம் குமாஸ்தா ஆனார்; பொறுப்பு வாய்ந்த தந்தியடிக்கும் பதவியைப் பெற மிக உழைத்தார்; புகை வண்டிகளில் பிரயாணிகளுக்குப் படுக்கை வண்டிகள் இருக்க வேண்டுமென வற்புறுத்தி, அப்படுக்கை வண்டிகளை விலைபேசித் தந்ததில் அடைந்த ஊதியத்தைக் கொண்டு வேறொருவரோடு வியாபாரஞ் செய்து வந்தார்; அக்காலத்தில், ரசாயன மூலமாக இரும்பை எஃகாகச் செய்யலாமென்பதைக் கண்டுபிடித்து, உலகம் வியக்குமாறு செய்தார். எஃகின் ஏற்றம் உலகெலாம் பரவ, எஃகு வியாபாரம் விரைவில் செழிப்புற்றது. கார்னகி பெரிய எஃகுக் கம்பெனி ஒன்றை வைத்துத் திரண்ட பொருள் சம்பாதித்து, எஃகு அரசர் எனப் பெயர் பெற்றார். இப் பெரியார் தாம் சம்பாதித்த பொருளில் 7,50,00,000 பவுன்களைப் பல தருமஸ்தாபனங்களுக்குக் கொடுத்துள்ளார்.

### எச். ஜி. வெல்ஸ்

இவர், இன்று இங்கிலாந்தில் உள்ள பிரபல நூலாசிரியராவர். இவர் முதலில் ஒரு ஜவுளிக்கடையில் சிற்றாளாக இருந்தவர்; வேலை செய்த நேரம் போக எஞ்சிய நேரத்தில் கல்வி கற்றுப் பின்னர் ஒரு சிறிய பள்ளிக்கூட ஆசிரியரானார்; ஆசிரியராக இருந்துகொண்டே மேலும் மேலும் படித்துச் சிறந்த அறிஞரானார்; யாவரும் விரும்பிப் படிக்குமாறு நூல்களை

எழுதும் வன்மையைப் பெற்றார். இவர் எழுதியுள்ள நூல்கள் பல. இவர் இக்காலத்திய சிறந்த நூலா-சிரியருள் ஒருவராக விளங்குகின்றார்.

## முஸ்தபா கேமால் பாட்சா

இவர் மிக எளிய முகம்மதிய் குடும்பத்திற் பிறந்த-வர். 'கல்வி கற்காத மூடன்' என ஆசிரியரால் இக-ழப்பட்டுக் கலாசாலையினின்றும் வெளியேற்றப்பட்ட இவர், துருக்கி இராணுவப் பள்ளியிற் சேர்ந்து படைக்-கலப் பயிற்சி பெற்றார்; சேனையில் சாதாரணப் போர் வீரரானார்; பின்னர்த் தேசீய நூல்களைக் கற்றுத் தேசாபிமானம் மிகுந்து, தம் தாய் நாட்டை மேனிலைக்குக் கொண்டுவர இரவும் பகலும் சிந்தித்து வந்தார். அக்காலத்தில் ஐரோப்பியப் பெரும்போர் மூண்டது. அது சமயம் இவர் 'தேசியக் கட்சி' ஒன்றைத் தோற்றுவித்துத் தம் நாட்டை பகைவர் கையினின்-றும் காப்பாற்றினர். போர் முடிந்ததும், நாட்டு நலத்-தைக் கவனியாதிருந்த துருக்கிச் சுல்தானை ஓட்டிவிட்டு, அந்நாட்டின் சர்வாதிகாரியானர்; அன்று முதல் நாட்டு நலத்துக்கெனத் தம் உடல், பொருள், ஆவி மூன்றை-யும் அர்ப்பணஞ் செய்து வருகின்றார்; துருக்கிப் பெண்-களை வீரப் பெண்மணிகளாக்கிக் கல்வி ஞானம் அளித்-துள்ளார்; பழைய குருட்டுப் பழக்க வழக்கங்களை வேரோடு களைந்துள்ளார். மிகச் சாதாரணக் குடும்-பத்திற் பிறந்த இவர், துருக்கியின் முடிசூடா மன்ன-ராகி, நாட்டுக்குச் செய்யுந் தொண்டுகள் மிகப் பல. இவர் செய்துள்ள தீவிரமான சீர்திருத்தங்களைக் கண்டு மேனாடுகளும் பிரமிக்கின்றன.

அன்புள்ள மக்களே, மேற்கூறிய வரலாற்றுச் சுருக்கங்களிலிருந்து நீங்கள் அறிந்துகொள்வதென்ன? சிந்தித்துப் பாருங்கள்.

---

## 21. குழந்தைகள் பாதுகாப்பு

1. குழந்தைகள் நலத்துக்கே தம் வாழுநாட்களைச் செலவிட்ட **எக்லண்டைன் ஜெப்** அம்மையார் உலக சரித்திரத்திற் குறிப்பிடத் தக்கவர். —**காந்தியடிகள்**

ஐரோப்பியப் பெரும் போருக்குப் பின்னர், போரில் மாண்ட வீரர்களின் குழந்தைகள் உண்ண உணவும், உடுக்க உடையுமின்றித் தவித்தார்கள். கவனிப்பாரற்ற ஆயிரக் கணக்கான அக்குழந்தைகள் கண் கலங்கி நின்றார்கள்; தம்மைக் காக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்தார்கள். அவர்கள் முகத்தில் இயற்கையாகத் தவழ வேண்டிய புன்னகை எங்கோ மறைந்தது.

மிகக் கேவல நிலையில் இருந்த அவ்வநாதைப் பிள்ளைகளைக் கண்ட **எக்லண்டைன் ஜெப்** என்னும் பெண்மணி ஒருவர் அவர்கள் துன்பங்களை ஒழிக்க முன் வந்தார்; 1919-ஆம் ஆண்டில் **குழந்தைகள் பாதுகாப்புச் சங்கம்** என்னும் ஒரு ஸ்தாபனத்தைச் **சுவிட்ஜர்லாண்டில்** ஏற்படுத்தினார்; 'உலக மக்கள் அனைவரும் இத்தருமக் கைங்கரியத்தில் ஈடுபட வேண்டும்' எனச் சர்வதேச மக்களையும் வேண்டிக்கொண்டார்; தமது அரிய முயற்சியாலும் சலியா உழைப்பாலும் சில ஆண்டுகளுக்குள் நாற்பத்திரண்டு நாடுகளிலிருந்து சுமார் நாற்பது லக்ஷம் போன் மூலதனமாகச் சேர்த்தார்.

இவ்வம்மையார் நாடு - சாதி - மத வேற்றுமைகளின்றி எல்லா ஏழைக் குழந்தைகளையும் தமது சங்கத்தில் சேர்த்தார்; அவர்களுக்கு உணவும் உடையும் அளித்தார்; கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்தார்; உலக நிலையையும், சன்மார்க்க நெறியையும் அவர்கள் அறியுமாறு செய்தார்; நீதி நூல்களை அவர்களுக்குக் கற்பித்தார்; தொண்டு செய்வதன் சிறப்பைப் பல நாட்டுக் கதைகளைக் கொண்டு அச்சிறு பிள்ளைகள் மனத்தில் வேரூன்றச் செய்தார்; ஆண்டுதோறும் உலகமெங்கும் குழந்தைகள் பாதுகாப்புக்குரிய காட்சிகள் நடைபெறவும், உடல் உரம் பெற்ற பிள்ளைகட்குப் பரிசில்கள் வழங்கவும் ஏற்பாடு செய்தார்.

இங்ஙனம் அநாதைப் பிள்ளைகட்கும் ஏழைப் பிள்ளைகட்கும் ஒரே தாயாராக விளங்கிய இவ்வம்மையார் உலகிற் பெறுதற்கரிய சாஸனம் ஒன்றைத் தயாரித்து அதில் சர்வதேசப் பிரதிநிதிகளும் (அங்கீகரித்துக்) கையொப்ப மிடுமாறு செய்தார். குழந்தைகளின் உரிமைகளைப் பாதுகாக்கும் சாஸனம் என்பது அதற்குப் பெயர். அது 1924-ம் ஆண்டில் சர்வதேச சங்கத்தாரால் ஜினிவாவில் அங்கீகரிக்கப்பட்டது. அதில் உள்ள சிறந்த விதிகளாவன :

1. குழந்தைகளின் உரிமைகள் யாவற்றிலும் சிறந்தவையாகும். குழந்தைகள் எம்மதத்துக் குழந்தைகளாயினும், எந்நாட்டுக் குழந்தைகள் ஆயினும் வேறுபாடின்றி எந்நாட்டிலும் ஒரே விதமான பாதுகாப்புப் பெறுதல் வேண்டும்.

2. பிள்ளைகள் பலம் பெற்று வளர்வதற்கும், அவர்களை அறிவுள்ளவராக வளர்ப்பதற்கும் ஒவ்வோர் அரசாங்கமும் உதவி செய்தல் வேண்டும்.

3. அரசாங்கம், பசிக் கொடுமையால் வாடும் குழந்தைகளுக்கு உணவளித்தல் வேண்டும்; நோயுற்ற குழந்தைகளைப் பராமரித்தல் வேண்டும்; மெலிந்து வாடும் குழந்தைகளைக் கவனித்து அவர்களை நன்னிலைக்குக் கொண்டுவருதல் வேண்டும்; தெருச் சுற்றித் திரியும் சிறுவர் சிறுமிகளை ஒதுக்கித் தள்ளிவிடாமல், அவர்களை நல்வழிக்குக் கொண்டுவரல் வேண்டும். பெரு வீரர்களின் அற்புத வீரச் செயல்களையும், ஒழுக்க நெறியையும் குழந்தைகட்குச் சிறிது சிறிதாகப் போதித்தல் வேண்டும். எத்தகைய விபத்து ஏற்படினும் முதலில் குழந்தைகளையே காப்பாற்றுதல் வேண்டும்.

4. சிறுவர் சிறுமியர் உயர்ந்த நோக்கங் கொண்டவராகவும் நன்னெறியில் நடப்பவராகவும் செய்யப் பெற்றோர் பெரிதும் முற்படல் வேண்டும்.

5. தொண்டு செய்யும் தூய எண்ணத்தைப் பிள்ளைகட்குக் குழந்தைப் பருவத்திலேயே ஊட்டுதல் வேண்டும். எம்மதத்தார்க்கும் — எந்நாட்டார்க்கும் தொண்டு செய்ய விரும்பும்படி அவர்களைப் பழக்குதல் வேண்டும்.

இவ்விதிகளைக் கொண்ட உயர்ந்த சாஸனம் வேறில்லை எனச் சர்வ தேசப் பிரதிநிதியார் வியந்து பாராட்டினர்; சாஸனத்தைத் தயாரித்த எக்லண்டைன்

ஜெப் அம்மையாரைப் போற்றி, அவர் செய்துள்ள அரிய சேவைகளைப் பாராட்டி மகிழ்ந்தனர்; அம்மகத்-தான சாஸனத்தில் நாற்பத்தோன்பது நாடுகளின் பிரதிநிதிகள் மனமுவந்து கையொப்பமிட்டார்கள். அப்பிரதிநிதிகளுள் நம் காந்தியடிகளும் ஒருவராவர்.

சாஸனத்திற் கண்ட விதிகளை ஸ்பெயின் குடியரசு சர்க்கார், தன் சர்க்காரின் நாற்பத்தோராவது விதியா-கச் சேர்த்துள்ளதெனின், சாஸனத்தின் பெருமையும் அவசியமும் எத்துணை என்பதை நீங்களே உணருங்-கள்: அச்சாஸனத்தில் கண்டுள்ள விதிகளை எல்லா நாட்டுச் சர்க்கார்களும் இயன்ற வரையில் பின்பற்றி வருதல் குறிப்பிடத் தக்கது.

குழந்தைகளே, உலகில் எதிர்காலச் சந்ததியாராக விளங்குவாராதலின், அவர்கள் முன்னேற்றத்தில் கண்ணுங் கருத்துமாயிருத்தல் வேண்டும் என்பதை எல்லா அரசாங்கங்களும் உணருமாறு செய்ய எக்-லண்டைன் ஜெப் அம்மையார் எத்துணை உழைத்-திருப்பார் என்பதை எண்ணிப் பாருங்கள்: இத்த-கைய அரிய தொண்டைப் போற்றாதிருக்க யாருக்குத்-தான் மனம் வரும்? இத்தகைய அம்மையார் ஒருவர் நம் நாட்டில் இருப்பின், நம் நாட்டு-அநாதைப் பிள்ளை-கள் நாட்டுச் செல்வர்களாக வளர்க்கப்படுவார்கள் அல்லவா?

## 22. நட்பு நலன்

1. நண்பன், இரண்டு உடம்புகளில் ஓர் ஆன்மா போன்றவன்.

—அரிஸ்டாட்டில்

2. நண்பன் என்பவன் நம் குறைகளைப் பொறுப்பவனாக இருத்தல் வேண்டும்.

—ஷேக்ஸ்பியர்

3. நண்பனை இழக்காதிருக்க அவனுக்கு நன்மை செய்; பகைவனை நண்பனாக்க அவனுக்கு நன்மை செய்.

—பிராங்லின்

சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரும் நண்பரில்லாமல் வாழ இயலாது. நண்பன் இரண்டு உடம்புகளில் ஓர் ஆன்மா போன்றவன். ஆதலின், நாம், நம் வெற்றி தோல்விகளை நண்பனிடம் கூறி மகிழ்ச்சியையோ வருத்தத்தையோ அடைகின்றோம். எனவே, ஒருவருக்கொருவர் துணையாக நின்று ஒன்றுபட்ட மனத்தவராக இணைந்திருக்கவே நண்பர்களின் கூட்டுறவு வேண்டற்பாலது.

அமெரிக்காவின் குடியரசுத் தலைவராக விளங்கிய ஆபிரகாம் லிங்கன், "நண்பர் பலரே என் வாழ்க்கையைச் சிறப்பிக்கும் செல்வம் போன்றவர்," என அடிக்கடிக் கூறி மகிழ்வது வழக்கம். கார்பீல்டும் (Garfield) என்னும் அமெரிக்காவின் மற்றொரு குடியரசுத் தலைவர் தாம் கல்வி பயின்ற கல்லூரித் தலைவரது நட்பின் சிறப்பைத் தாம் இறக்குமளவும் கூறி மகிழ்ந்தனர்

இங்ஙனம் உலக சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தால், கணக்கற்ற மக்கள், நண்பர்களின் பேருதவியால் மிக உயர்ந்த நிலையைப் பெற்றனர் என்பது வெளியாகின்றது. வாழ்க்கையை அடியோடு வெறுத்துத் தங்களை மாய்த்துக்கொள்ள முயன்றவர்களும் நண்பர்களின் இதமான வார்த்தைகளால் மனந்தேறிப் பின்னர் உயர்ந்த நிலையைப் பெற்றுள்ளனர். ஆயிரக் கணக்கான போர்வீரர்கள், முடிமன்னர்கள் உலக சரித்திரத்தில், இடம் பெற்றிருப்பதற்கு அவர்தம் தாய்மாரும், மனைவியரும், உடன் பிறந்தாரும், பிள்ளைகளும், நண்பர்களுமே காரணமாவர்.

கல்வியிலும் தொழிலிலும் பிறவற்றிலும் முன்னேற வழியின்றி மனமுடைந்து தவித்த ஆடவர், பெண்டிர், கல்வியிலும் தொழிலிலும் பிறவற்றிலும் மிக்க மேலான நிலையை அடைந்தமைக்கு அவர்தம் நண்பர்களே காரணமாவர். தம்முள்ளே இருக்கும் தெய்வீகச் சக்தியை மறந்து தாம் எக்காரியத்தையும் செய்ய அருகரல்லர் என்றெண்ணிச் சோர்ந்த மக்களைத் தேற்றி, அவர்களுக்குள் ஒளிரும் தெய்வீகச் சக்தியைப் பற்றிய அறிவையூட்டிக் கடினமான காரியத்திலும் வெற்றி பெறச் செய்தவர்கள் நண்பர்களே ஆவார்கள். 'அடிமைகளாகவே இருக்கப் பிறந்தோம்' என்றெண்ணித் தங்களுக்கிருந்த சக்திகளை எல்லாம் மறந்து, அடிமை வாழ்க்கையை நடத்தி வந்த நீக்ரோவரைத் தட்டி எழுப்பி, 'நீங்களும் மக்களே; கல்வி கேள்விகளால் நீங்களும் நாகரிக ஜாதியினராகலாம்' என்னும் நம்பிக்கையை ஊட்டி, அவர்களை மேனிலைக்குக் கொண்டு

வந்தவர் பூகர் வாஷிங்டன் என்னும் நீக்ரோவரே ஆவர்.

ஐரோப்பியப் பெரும்போரில் வறுமையுற்று வாடிய இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இட்டாலி, பெல்ஜியம் முதலிய நாட்டினர்க்கு அமெரிக்க அரசாங்கத்தார் கோடிக் கணக்கான பொன்னை அளித்து உதவினர். இவ்வாறு நண்பர்கள் மக்களுக்கும் சமூகத்துக்கும் நாடுகளுக்கும் செய்யும் உதவிகள் பல. இத்தகைய மேலான குணமுள்ள நண்பரைச் சேர்வதே நன்று.

சிறிய தொகையைக் கொண்டு சிறிய கடையை அழகிய முறையில் வைப்பவன் தன் தொழில் வளர்ச்சிக்கென நண்பர் பலரைத் தேடிக்கொள்ளுதல் வேண்டும். அந்நண்பர்கள் அக்கடையில் நல்ல பொருள்கள் இருப்பதாகக் கூறி, தங்களுக்குத் தெரிந்த பலரை அவற்றை வாங்குமாறு சிபாரிசு செய்வார்கள்; அதனால், வியாபாரம் விருத்தியாகும்.

புதிதாக வைத்தியப் பயிற்சி செய்யும் நிபுணன் ஒருவன் தன் தொழில் விருத்தியாவதற்கு, முதலில் நல்ல நண்பர்களைப் பெறுதல் வேண்டும். அந்நண்பர்கள் பிறரிடம் அவனைப் பற்றி வானளாவப் புகழ்ந்து பேசுவர். அதை நம்பிய பலர் அவனிடம் வைத்திய உதவியைப் பெற வருவர். அதனால், வைத்தியன் மிக விரைவில் மேனிலையை அடைவான்.

இங்ஙனம் நாம் ஒவ்வொரு துறையிலும் முன்னேற்றம் அடைய நண்பர் பலர் நமக்குத் துணையாக

இருத்தல் கண்கூடு. "நண்பர்களே ஒருவனது நலே விதியை நிர்ணயிக்கக் கூடியவர்கள். நண்பர்களைத் திரட்-டச்சக்தியற்றவன் தன் வாழ்க்கையையே பயனற்றதாக்-கிக் கொள்கின்றான்," என்னும் டாக்டர். ஹில்லிஸ் என்பார் தம் பொன்னுரை கருத்தில் இருத்தத் தக்கது.

நாம் தனியே இருக்கையில், செய்யமுடியாதெனத் தீர்மானித்த ஒன்றை நண்பர்கள் முன்னிலேயில் அஞ்-சாமையுடன் செய்து முடிக்கின்றோம். இதற்குக் காரணம் என்ன? நம் நண்பர்கள் நம்முன் இருக்கின்ற-னர் என்னும் துணிகர எண்ணமேயாகும். இயலாத ஒன்றாயினும், அதனை இலகுவில் செய்து முடிக்கும் உபாயத்தை நண்பர் கூறுகின்றனர். ஒருவன் நம்முன் குடிகொண்டுள்ள அச்சத்தை விரட்டுகின்றான்; ஒருவன் வேலையைச் செய்து முடிக்கத் தக்க உபாயத்-தைக் கூறுகின்றான்; வேறொருவன் நமது சிந்தனைச் சக்தியைப் பெருக்குகின்றான். எனவே, நண்பர்கள் கூட்டுறவினால், நாம், எத்தகைய காரியத்தையும் எளி-திற் செய்து முடிக்கலாம்.

'நண்பர்களைப் பெறு; நீ கைகளையும் செல்வத்தை-யும் பெற்றவனாவாய்,' என்று பர்லே என்னும் பிரபு கூறியுள்ளது கருதத் தக்கது. ஏழை ஒருவன் நண்பர்-களைப் பெற்றிருப்பின், அவர்களால் பல துறைகளி-லும் அவன் முன்னேற்றம் பெறக் கூடும். அவர்கள் அவனுக்குப் பொன்னையும் புகழையும் தேடுவதில் நாட்ட முறுவார்கள்; செல்வத்தையும் கல்வியையும் விடச் சிறந்த உதவி செய்பவர்கள் அவர்களே என்க.

நம் நண்பனாக இருப்பவன் நாம் செய்யக் கூடு-வனவற்றைச் செய்து முடிக்க நம்மைத் தூண்டுபவனாக இருத்தல் வேண்டும்; நம் அறிவுடன் அவன் தன் அறி-வையும் சேர்த்தல்வேண்டும்; நமது பலத்துடன் தனது பலத்தையும் சேர்ப்பவனாக இருத்தல் வேண்டும்; நமக்கு வந்த இன்ப துன்பங்கள் தனக்கு வந்தவைஎனக் கருதி நடப்பவனாக அமைதல் வேண்டும். மிகச் சங்கட-மான சந்தர்ப்பத்திலிருக்கும் ஒருவனது வாழ்க்கையைச் சீர்ப்படுத்துபவனாக நண்பன் இருத்தல் வேண்டும்.

கருதிய கருமம் கைகூடாது மனமுடைந்து வாடிய முகத்தோடிருக்கும் ஒருவனை உற்சாகப்படுத்தி, மனக் கலக்கத்தை மாற்றிக், கருதிய கருமம் கைகூடுமாறு உதவுபவனே உண்மை நண்பன். கல்வி கற்றுப் பட்டம் பெற்ற ஒருவன், வாழ்க்கையை ஆரம்பிக்கப் பணம் இன்றித் தவிக்கையில், அவனைத் தனக்குத் தெரிந்த பலருக்கு அறிமுகப்படுத்தி அவர்கள் மூலமாக அவனுக்கு வேலையைத் தேடிக்கொடுத்து அவன் வாழ்க்-கையைச் செம்மைப்படுத்துபவனே உண்மை நண்பன்.

நண்பனிடங் காணப்பெறும் சிறிய குற்றங்களை-யும் அவனுக்கு அடிக்கடி எடுத்து விளக்கி, அவற்றை அகற்றப் பாடுபடுபவனே உண்மை நண்பன்; அவனது குற்றங் குறைகளைப் பொருட்படுத்தாமல், அவனது நன்மையில் நாட்டமுடையவனாய், அமயம் வாய்க்கும் போதெல்லாம் அவனை உயர் நிலைக்குக் கொண்டு வருபவனே உண்மை நண்பன்.

அன்புள்ள பிள்ளைகளே, நண்பர்களால் உண்டா-கும் அளவிடற்கரிய நன்மைகளை அறிந்துகொண்டீர்-

கள் அல்லவா? நமது நன்மையில் நாட்டமுடையவர்களையே நாம் நண்பர்களாகக் கொள்ளல் வேண்டும். அவர்கள் நம் குற்றங்களைப் பொறுப்பவர்களாக இருத்தல் வேண்டும்; சுயநலம், கோபம், பொறாமை, முதலிய தாழ்ந்த குணங்கள் இல்லாதவர்களாக இருத்தல் வேண்டும்; அஞ்சாமை, சகிப்புத்தன்மை, ஊக்கம், உழைப்பு, தன்னம்பிக்கை முதலான உயர்குணங்கள் உடையவர்களாக விளங்குதல் வேண்டும். இத்தகையோரே நமக்குற்ற நண்பர்களாவார்கள். அவர்களைப் போலச் சிறந்த குணங்களையுடையவர்களாக நீங்களும் இலங்குதல் வேண்டும். அங்ஙனமாயின்றான் இரு திறத்தாரும் மனம் ஒன்றுபட்டு இன்பமாக உடனிருந்து அரிய காரியங்களைச் செய்து முடித்தல் கூடும்.

---

## 23. ஆன்றோர் வரலாறுகள்

அறிவுத் துறையிலும் ஒழுக்க நெறியிலும் நாட்டுச்சேவையிலும் தம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவரே ஆன்றோர் எனப்படுவர். அறிவுத் துறையில் பெயர் பெற்றோர் ஐஸக் நியூட்டன். கலிலியோ, எடிசன், ஷேக்ஸ்பியர், கம்பர், காளிதாஸர் முதலியோராவர். ஒழுக்க நெறியில் பெயர் பெற்றோர் புத்த மஹான், மஹா வீரர், இயேசு நாதர், முஹம்மது நபி, சாக்ரடிஸ், ரொமெய்ன் ரோலண்ட், விவேகானந்தர், இராமகிருஷ்ணர், இராமதீர்த்தர், காந்தியடிகள் முதலியோராவர். நாட்டுப் பணியில் நனி சிறந்தோர் அலெக்ஸாண்டர், ஸீஸர், நெப்போலியன், வாஷிங்டன், லெனின், கரி-

பால்டி, முசோலினி, ஹிட்லர், கெமால் பாட்சா, ஸ்டா-லின், பில்சுட்ஸ்கி, டிவேலரா முதலியோராவர்.

களங்கமற்ற உள்ளத்தையுடைய இளைஞர் இம் மூன்று திறத்துப் பெரியார்தம் வரலாறுகளையும் போதனைகளையும் அவர்கள் கண்டறிந்த உண்மைகளை-யும் நன்கறிந்து, 'சக்தி' பெறுதல் வேண்டும்; தம் பிற்-கால வாழ்க்கையாகிய மாளிகைக்கு இப்பெரியார்தம் நற்பழக்கங்களாகிய அஸ்திவாரத்தை இடுதல்வேண்டும்; அந்நிலையிற்றான் இளைஞர் அறிவு - ஒழுக்கம் - பணி இம்மூன்று சிறந்த துறைகளிலும் ஒப்பற்று ஒளிர்வர்.

நம் நாட்டுப் பெரியரும் சிறியரும் பற்பல மஹா நாடுகளைக் கூட்டுவதும் தீர்மானங்களைக் காகிதத்தில் குறிப்பதும் கலைவதுமாகக் காலந் தள்ளி வருகின்ற-னரே அன்றிச் செயல் முறையில் யாதேனும் செய்து முடிக்கின்றனரா? மஹா நாடுகள் - தீர்மானங்கள் - வீண் ஆர்ப்பாட்டங்கள் இவற்றால் யாதேனும் பயன் உண்டா? வேண்டப்படுவது மனவுறுதியே. அதுவே இன்றியமையாதது. மேடைமீது புரியும் சொற்-பெருக்கும் வீர முழக்கமும் பயனற்றவை! பயனற்-றவை!! அவற்றால் விளைவது ஒன்றும் இல்லை. எண்-ணங்கள் யாவும் ஒருங்கே திரண்டு உருப்பட்ட நிலை-யில் 'சக்தி'யாகப் பரிணமித்தல் வேண்டும்; 'மன உறுதி' ஏற்படல் வேண்டும். மன உறுதி இருக்கு-மாயின், ஒவ்வோர் இளைஞனும் இவ்வுலகில் மஹத்-தான வேலைகளைச் செய்து காட்டலாம்.

அறிவுத் துறையில் வல்லுநராக இருந்த பெரியார் தம் வரலாறுகள் நமக்கு ஊட்டுவன யாவை? எடிச-

னது ஒப்புயர்வற்ற வரலாறு யாவரும் அறிந்து தீர வேண்டும். மின்சார யுகத்தைத் தோற்றுவித்த பெரியார் எடிசனே ஆவர். அவருடைய அரிய ஆராய்ச்சியின் பயனாக வெளிப் போந்தவையே இன்று நாம் கண்டு களிக்கும் இயங்கு படக்காட்சி, டெலிபோன், கிராமபோன், மின்சார விளக்குகள், விசிறிகள் முதலியன. ஆயிரத்தெட்டுக்கு மேற்பட்ட ஆராய்ச்சிகள் அவர் செய்தனவாகும். எனவே, இவரது வரலாற்றைப் படிக்கும் இளைஞர் தாமும் அத்தகைய துறையில் உழைக்க முயல்வர்; முயல மனங்கொள்வர். கணிதத்தில் விற்பன்னரான ஐஸக் நியூட்டன் வரலாறு, வான சாஸ்திரத்தில் பெயர் பெற்ற கலிலியோ வரலாறு முதலியவை இளைஞரைக் கணிதத்திலும் வான சாத்திரத்திலும் ஊக்கும் அல்லவா? கம்பர் இயற்றிய இராம காதையைப் படிக்குந்தோறும் இளைஞர் புலவராகத் திகழக் காணலாம்; அடுத்தடுத்து அதனைப் படிப்போர் பெரும் புலவராகலாம். இங்ஙனமே காளிதாஸர் இயற்றியுள்ள சாகுந்தலம் முதலிய நூல்களைப் படிக்கும் இளைஞரும் இயல் - இசை - நாடகச் சுவைகளை நன்கறிந்து மிளிர்வர். எனவே, நல்லறிவைக் கொளுத்தி ஊக்கத்தையும் உழைப்பையும் உற்சாகத்தையும் ஊட்டி வளர்க்கும் இத்தகைய பெரியார்தம் வரலாறுகளை இளைஞர் இன்பமாகக் கற்று இனிய வாழ்வில் இன்புறுதல் வேண்டும்.

ஒழுக்க நெறியில் சிறந்தவராகச் செழித்திருந்த ஆன்றோர்தம் அரிய வரலாறுகள் நமக்கு அறிவிப்பன

யாவை? புத்த மஹானது வாழ்க்கை அன்பையே அடிப்படையாகக் கொண்டது. 'அன்பு ஒன்றால்தான் உலகம் இன்பத்தை அடைதல் கூடும்' என்னும்பேருண்மையை அப்பெரியார் கண்டார்; அதனை உலகத்தவர்க்கு உணர்த்தத் தம் சுக போகங்களை வெறுத்து வெளிக் கிளம்பினர்; யாண்டும் அன்பைப்பற்றிப் பிரசாரம்செய்தார். அன்பு என்னும் 'போது' மலர்ந்து, 'புத்த மதம்' என்னும் மணத்தை வீசி, ஆன்மாக்களை அற நெறியில் வாழ்வித்தது. இவ்வன்பு நெறியையே இயேசு நாதரும் முஹம்மது நபியும் தத்தம் நாடுகளில் போதித்துச் சென்றனர். இங்ஙனம் உலக மக்கள் உயரிய வழியில் உய்யப் பெருமக்கள் உழைத்த உழைப்பெல்லாம் நமக்கறிவிப்பது எதனை? 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் உயரிய மந்திரம் ஒன்றை அன்றோ! 'ஒருவன் உனது வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு இடது கன்னத்தைக் காட்டுக; உனது மேலாடையைக் கவர்பவனுக்கு அரை ஆடையையும் கொடு' என்பதை உபதேசித்த நாசரேத்தூர் அடிகளின் தியாக வாழ்வு நம் இளைஞர்தம் சோம்பல் வாழ்க்கையைத் தியாக வாழ்வாக மாற்றும் அன்றோ? பொது மக்கள் நன்மைக்கென உழைக்கப் புறப்பட்ட இவ்வுத்தமர், ஒரு சிலரால் பல வித இன்னல்கட்காளானமை நம் இளைஞர் உள்ளத்தில் ஊன்றி உயர்ந்த தத்துவ ஞான உணர்ச்சியை உதிக்கச் செய்யும் அல்லவா? எனவே, அன்பு, அடக்கம், தியாகம், பிழை பொறுத்தல், பணி செய்தல் முதலிய உயரிய குணங்கள் உதயமாகப் பேருதவி செய்யும் இப்பெரி-

யார்தம் தியாக வாழ்க்கை வரலாறுகள் இளைஞர் கற்-றுப் பின்பற்றத் தக்கவை ஆகும்.

'நாட்டுப் பணி' என்னுந் துறையில் உழைத்த பெருமக்களில் மிகச் சிறந்தவர் கரிபால்டி, முசோலினி, கெமால் பாட்சா முதலியோர். கரிபால்டி இட்டாலிய வீரர்; இட்டாலியின் சரித்திரத்தையே தமது மனோ வல்லமையால் அடியோடு மாற்றியவர்; பிரஞ்சுக்காரர் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த இட்டாலியைப் பல இன்னல்கள் பட்டுத் - தம் உயிரையும் இழக்கத் துணிந்து - பல போர்களில் வெற்றி பெற்று - பல முறை சிறை சென்று - இரட்சித்த பெரியாராவர். உலக நாகரிகத்துக்கே ஆதி இடமான ரோமாபுரியைப் பகைவர் சூழ்ந்துகொண்டபோது இட்டாலி மக்களை நோக்கி, 'நீவிர் நமது நகரத்தைக் காக்க வாரீராயின், நான் நாய்களை உபயோகித்தாவது காக்க முற்படுவேன்' எனக் கூறின வீர வார்த்தைகள் - நாட்டுப் பற்று மிகுந்த பொன்னுரைகள் - இளைஞர்தம் இதயத்தை ஈர்க்கும் என்பதில் ஐயமுண்டோ? போர்த்துறையில் பயிற்சியற்ற இளைஞரைக் கொண்டு அவர்கட்கு வீரத்தை ஊட்டி - நாட்டுப்பற்றை அவர்தம் உள்ளத்-தில் உதிக்கச் செய்து - பண்பட்ட பிரஞ்சுப் போர் வீரரை வென்று வாகை சூடிய கரிபால்டியின் வீர வரலாறு நம் தாய் நாட்டு இளைஞரைப் பெருவீரராக்-கும்! ஆக்கும்!! ரோமாபுரியின் பாழடைந்த அரண்களை-யும் அழகிய கோபுரங்களையும் கண்டு கண்டு அவர் மனம் உருகியதையும், அவை பகைவர் கைப்பட்டபோது

அவர் மனந்துடித்ததையும், அப்போது அவர் கூறிய நாட்டுப் பற்று மிருந்த வீர வார்த்தைகளையும் இளைஞர் உணருவாராயின், அம்மம்ம! இளைஞர் வீர சிங்கங்களாக அல்லவோ விளங்குவர்! கரிபால்டியின் வீர வாழ்க்கை என்னும் வளம் பொருந்திய மாளிகை, 'மனோ வலிமை' என்னும் அழகிய அசைக்க முடியாத அஸ்திவாரத்தின்மீது கட்டப்பட்டதாகும். மனோ வலிமையாற்றான் கரிபால்டி இட்டாலியின் சரித்திரத்தில் இடம் பெற்றார்! உலகப் பெருமக்கள் வரிசையில் ஒருவராக இருக்க இடம் தேடிக்கொண்டார்!! உலக இளைஞர் உள்ளத்திலும் இடம் பெற்றார்!!!

கரிபால்டிக்குப் பின்னர் இட்டாலி பல வழிகளிலும் அல்லலுற்றது. ஐரோப்பியப் பெரும் போருக்கு முன்னர் இட்டாலி நான்காந்தர வல்லரசாக இருந்தது. ஆனால், அது போருக்குப் பின்னர் முதல்தர வல்லரசாகமாறியது; உலகத்தாரின் கவனத்தைக்கவர்ந்தது; ஐரோப்பாவில் சிறந்த வல்லரசுகளுள் ஒன்றாக இருக்கின்றது. ஐரோப்பாவில் எக்காரியத்திலும் அதனை வர வேற்காதநாடில்லை. மிகப்பெரிய வல்லரசானபிரிட்டனும் இப்பொழுது ஐரோப்பாவின் அமைதிக்கு வழிகாண இட்டாலியின் உதவியை நாடுகிறது. இத்தகைய உன்னத நிலைக்கு இட்டாலியைக் கொணர்ந்தவர் - இன்றும் கொண்டு வருபவர் அரசியல் நாடக அரங்கில் பிரபல நடிகராக இருப்பவராகிய முசோலினியே ஆவர். "சீஸர், கரிபால்டி, நெப்போலியன் இவர் தம் வரலாறுகளே என்னை இந்நிலைக்குக் கொணர்ந்தவை"

என முசோலினி அவ்வப்போது கூறுவது வழக்கம். இவர் ஏழைக் கொல்லரின் புதல்வர்; வாழ்க்கையில் சொல்லொணுத் துன்பங்களை அடைந்தவர்; பள்ளி ஆசிரியராகவும், பத்திரிகாசிரியராகவும், வாள் தாங்கிய போர் வீரராகவும் இருந்தவர்; இறுதியில் பாஸிஸ்ட் கட்சித் தலைவராக இருந்து சர்வாதிகாரியானுர்; இட்டாலியை எல்லாத் துறைகளிலும் நவீன இட்டாலியாக மாற்றி வருகின்றுர். "தேச சரித்திரம் ஆண்மை உள்ளவனுக்கு உரியதே அன்றிப் பயந்தவனுக்கு அன்று; மனவலிமை உள்ளவன் அதனைத் தன் விருப்பம் போலத் திருப்பி அமைக்க இயலும்" என்று இவர் கூறும் கூற்றில் உயிர் வெளிப்படக் காண்கிறோம். இவர், தாம் கூறிய விதமே இட்டாலியின் சரித்திரத்தை மாற்றி அமைத்தார். இவரல்லவா வீர புருஷர்? ஐரோப்பிய அமைதி இன்று இவர் கையில்தான் இருக்கிறது. ஹிட்லர் போருக்கு முனைவராயின், பிரிட்டனும் பிரான்சும் ஒன்றுபட்டு இட்டாலியின் உதவியை நாடும். இட்டாலி ஜெர்மனியோடு சேருமெனத் தெரிந்தால் பிரிட்டன் போரைத் தொடங்காது. இட்டாலி பிரிட்டிஷோடு சேருமெனத் தெரிந்தால், ஜெர்மனி போரை விரும்பாது. இங்ஙிலையில் இட்டாலியை வைத்துக்கொண்டு, ஐரோப்பாவிலேயே முசோலினி தமது செல்வாக்குக் கொடியைப் பறக்க விட்டுள்ளார். இவரது வீரம் ததும்பும் பொன் மொழிகள் இளைஞர்க்குப் புத்துயிர் அளிப்பன ஆகும். இவரது வீர வரலாறு - தியாக சரித்திரம் இளைஞர்க்குப் பெருந்துணை புரியும் நண்பனுகும்; கிழவரைக்

குமரர் ஆக்கும்; குமரர்க்கு அதிக இளமையை உண்டாக்கும்.

எனவே, இம் முத்துறைகளினும் வல்லுநராக விளங்கிய - விளங்குகின்ற ஆன்றோர் வரலாறுகளே இளைஞரை அறிவு வாய்ந்த பெருமக்களாகவும், ஒழுக்கம் நிறைந்த ஞானிகளாகவும், வீரமும் மனோவலிமையும் பொருந்திய இராஜ தந்திரிகளாகவும் மாற்றக் கூடியவை என்பது பேருண்மை என்பது அங்கைக் கனி போல் ஐயமற விளங்குகின்றது. நம் தமிழ் நாட்டு இளைஞர் இப்பேருண்மையை உணர்ந்து நடப்பின், இத்தமிழ் நாடு, சங்க காலத் தமிழ் நாட்டினும் நனி சிறந்து பொன்னாடாகப் பொலிவுறும் என்பது முக்காலும் உண்மை.

## 24. சர்வ தேச சங்கம்

1. **சர்வ தேச சங்கம்** உலகில் போர் நடைபெறாமல் இயன்றவரையில் தடை செய்து வருகின்றது; எல்லா நாடுகளிடத்தும் சகோதர உணர்ச்சியையும் ஒற்றுமையையும் உண்டாக்கி வருகின்றது.

—**காப்டன் அன்டோனி ஈடன்**

பெரிய வல்லரசுகளுக்குள் போர் நிகழ்வது, ஒன்று மற்றொன்றைப்பற்றிக்கொள்ளும்பொறாமையாலாகும். இரண்டும் பரஸ்பரம் நேசமாக இருக்குமானால் போர் எழ இடமில்லை. ஆயுத பலத்திலும் வியாபார நிலைமையிலும் ஒன்றை ஒன்று நன்கு அறிந்திருக்குமாயின், நேசமாக இருக்க இயலும்; அங்ஙிலையில் இரகசியமாக எந்த நாடும் படைதிரட்ட இயலாது. இவ்வுண்மைப்-

படி உலகில் உள்ள எல்லா நாடுகளும் நடக்குமாயின், போர் என்ற வார்த்தையே அகராதியிலும் காண இயலாததாகும். இவ்வுண்மையை ஐரோப்பிய மஹா யுத்தத்தின் பின்னரே வல்லரசுகள் உணர ஆரம்பித்தன. அதனைச் செயல் முறையில் செய்து, சர்வ தேச சங்கம் (League of Nations) ஒன்றைத் தாபித்தவர் அப்பொழுது அமெரிக்கக் குடியரசுத் தலைவராக இருந்த உட்ரோ வில்சன் என்பவர் ஆவர்.

இச்சங்கம் ஜினிவா நகரில் அமைந்துள்ளது. இதில் 55 நாடுகள் சேர்ந்துள்ளன. இந்நாடுகள் யாவும் அவசியமின்றிப் போர் தொடுப்பதில்லை என்றும், சங்கத்தின் முடிவுக்குக் கட்டுப்படுவதென்றும் ஒப்புக்கொண்டுள்ளன. சங்கத்தின் தீர்ப்புக்குக் கட்டுப்படாத நாட்டைப் பொருளாதாரத் துறையிலும் வாணிபத் துறையிலும் பகிஷ்காரம் செய்தல், அவசியம் நேரின் படைகொண்டு அடக்குதல், சங்கத்தினின்று நீக்குதல் முதலிய தண்டனைகளைச் செய்யலாம் என்பதை எல்லா நாடுகளும் ஒப்புக்கொண்டுள்ளன. நாடுகள் ஒன்றுக்கொன்று செய்துகொள்ளும் ஒப்பந்தங்கள் சர்வ தேச சங்கத்தில் பதிவு செய்துகொள்ளுதல் வேண்டும்; பதிவு செய்யப்படாத உடன்படிக்கை செல்லுபடி ஆகாததாக மதிக்கப்படும். இச்சிறந்த விதி எல்லா நாடுகளாலும் கையாளப்பட்டு வருகிறது.

படைக்கல ஒழிப்பு, பொருளாதாரம், சமூக முன்னேற்றம், தொழிலாளர் இயக்கம் முதலிய விஷயங்களைப் பற்றிய மஹா நாடுகளில் ஒவ்வொரு நாடும் கலந்து வேலை செய்ய வேண்டுவதாக இருப்பதால் ஒவ்-

வொரு நாடும் சர்வ தேச சங்கத்தின் ஒத்துழைப்பின்றி வாழ்தல் அரிது. ஆனால், அமெரிக்கா இன்னும் இச் சங்கத்தில் சேரவில்லை. எனினும் அஃது இச்சங்க நட-வடிக்கைகளில் கலந்து பேரூக்கம் காட்டி வருகிறது. ஜப்பான், ஜெர்மனி ஆகிய இரண்டும் தமக்கு நியாயம் கிடைக்கவில்லை எனக் கூறி, இச்சங்கத்திலிருந்து வில-கிக்கொண்டன. ஆயினும், அவை வேறு வழியின்றி விரைவில் சங்கத்தில் சேர்ந்தே தீரும். ரஷியா சென்ற ஆண்டு இச்சங்கத்தில் சேர்ந்தது. பிரிட்டன் ஆட்சிக்-குட்பட்ட இந்தியா, கானடா, தென் ஆப்பிரிக்கா, ஆஸ்ட்ரேலியா, நியூஸிலண்ட் ஆகிய நாடுகள் தனித்தனி உரிமையுடன் இச்சங்கத்தில் அங்கம் வகிப்பதால் பிரிட்டனது செல்வாக்கு இச்சங்கத்தில் அதிகமாக இருக்கின்றது.

இச்சங்கம் உலகில் சமாதானத்தை நிறுவப் பெரும் பாடுபட்டுள்ளது. இஃது ஏற்பட்ட பதினறு வருடங்கட்குள் மஹத்தான வேலைகளைச் செய்துள்-ளது. ஸ்வீடன், பின்லண்ட், ஹாலண்ட் நாடுகளுக்-கிடையே நேர இருந்த போரை அடக்கி அமைதி நிலவச் செய்தது; ஜெக்கோஸ்லாவியா, அல்பீனியா நாடுகள் போருக்கு ஆயத்தமாய் நின்றபோது, அவற்றை அடக்கிச் சமாதானத்தை நிலை நாட்டியது; கிரீஸ், பல்கேரியா இரண்டும் எல்லைத் தகராறு சம்பந்த-மாகப் போருக்குச் சித்தமான போது, அச்சிக்கலைத் தீர்த்து அமைதியை உண்டாக்கினது; இட்டாலி, அபிஸீனியா இரு நாடுகளும் எல்லைத் தகராறு சம்-பந்தமாகப் போர் முழக்கின காலை, அவற்றை அடக்-

கிச் சமாதானம் செய்தது; தென் அமெரிக்காவில் பெரு, பராகுவே நாடுகளுக்கிடையே போர் மூண்ட போது போரை அடக்கி அமைதியை வற்புறுத்தினது.

இங்ஙனம் உலகில் போர் நிகழ ஒட்டாமல் சர்வ தேச சங்கம் தன்னால் இயன்ற வரையில் வேலை செய்து வருகின்றது; ஆயுதப் பரிஹரணத் திட்டத்தில் ஓயாமல் மூன்றாண்டுகளாக மஹா நாடுகளைக் கூட்டி உழைத்து வருகின்றது. இம்மஹா நாட்டுத்தலைவர் ஆர்தர் ஹெண்டர்சன் என்னும் பிரபல பிரிட்டிஷார் ஆவர். அப்பெரியார் தமது முழுச் சக்தியையும் பயன்படுத்தி படைக்கல ஒழிப்பு முறையை நிறுவப் பாடுபட்டு வருகின்றார்.

இச்சங்கத்தில் சேர்ந்துள்ள நாடுகளுக்கிடையில் நிகழும் வழக்குகளைத் தீர்ப்பதற்கு இச்சங்கத்தின் சார்பாகச் சர்வ தேச சங்க சாசுவத நீதி மன்றம் ஒன்று உள்ளது. இதில் பதினைந்து நீதிபதிகள் இருக்கிறார்கள். இவர்கள் உலகில் பெயரும் புகழும் படைத்தவர்கள்; பல நுணுக்கமான - ருசிகரமான வழக்குகளைத் தீர்த்தவர்கள்; அரிய யோசனைகளைச் சங்கத்துக்குக் கூறியுள்ளவர்கள்.

உலகத்தில் எல்லா நாடுகளிலும் நேரத்தக்க கொடிய நோய்களைப் போக்கும் விதத்தை இச்சங்கத்தார் ஆராய்ச்சி செய்து வருகின்றனர்; மனித சமூகத்துக்கு நேரக் கூடும் வேறு பல துன்பங்களைப் போக்கும் வழிகளையும் சிரத்தையுடன் ஆராய்ந்து வருகின்றனர். உலகத் தொழிலாளர் நிலைமையை ஆராயத் தனிக் கமிட்டி இச்சங்கத்தில் உண்டு. ஒவ்வொரு நாட்-

டிலிருந்தும் தொழிலாளர் பிரதிநிதி ஒருவரும், முத-லாளிகள் பிரதிநிதி ஒருவரும், அரசாங்கப் பிரதிநிதி ஒருவருமாகத் தொழில் மஹா நாட்டுக்குச் செல்வர். யாவரும் கலந்து ஆலோசித்து தொழிலாளர்க்கு வேலை நேரத்தைக் குறைத்தல், சம்பள உயர்வு முதலிய விஷ-யங்களைப் பற்றி ஆராய்ந்து முடிவு காண்பர்; தொழில் செய்யும் பெண்கள், சிறுவர் முதலியவர்களின் உடல் நலம் சம்பந்தமானவற்றையும் ஆராய்ந்து முடிவு செய்வர்.

அங்கம் வகிக்கும் எந்த நாடும் பொருளாதாரத் துறையில் தாழ்வடையுமாயின், இச்சங்கத்திலிருந்து உதவி கிடைக்கிறது. இத்தகைய உதவியைப் பெற்றே ஆஸ்ட்ரியா, ஹங்கெரி முதலான நாடுகள் இன்று நன்-னிலையில் இருக்கின்றன. ஒவ்வொரு நாட்டுத் தலை-வரோ, முதன் மந்திரியோ, ஒரு கட்சித்தலைவரோ ஒவ்-வோர் ஆண்டும் இச்சங்கத்தலைவராக இருத்தல் வேண்-டும் என்பது விதி. மஹா சபை என்பது உறுப்பினர் கூடுங் கூட்டம். இச்சபையில் ஒவ்வொரு நாட்டுக்கும் வாக்குரிமை உண்டு. ஆண்டில் மூன்று முறை கூடும் சாசுவத உறுப்பாளர் கூட்டம் 'சபை' எனப் பெயர் பெறும். இதில் பிரிட்டன், பிரான்ஸ், இட்டாலி முத-லியன சாசுவத உறுப்புகளாவன. காரிய நிர்வாக சபையில் எல்லா நாட்டு உறுப்பினரும் உளர். மஹா சபைக்கும் சபைக்கும் ஆலோசனை கூறும் நிபுணர் சங்-கங்கள் சில உண்டு. நாம் முற்கூறிய சாசுவத நீதி மன்-றம் ஒன்றும் இச்சங்கத்தைச் சேர்ந்ததே ஆகும். தொழி-லாளர் மஹா நாட்டுப் பிரிவு ஒன்றும் இதன்பாற்படும்.

சுருங்கக் கூறின், இச்சர்வ தேச சங்கம் உலகில் இருந்தே ஆகல் வேண்டும். இன்றேல், போர் முழக்கம் யாண்டும் எந்நிமிடத்திலும் கேட்கப்படும். பொதுமக்கள் மன அமைதியற்று வாழ்வு இழந்து நிற்க நேரும். இச்சங்கம் உலகத்தை உய்விக்கத் தோன்றியதென்னல் மிகையாகாது; இன்னும் இதில்சேராத நாடுகள் சேர்ந்து ஒத்துழைக்குமானல், இவ்வுலகம் அமைதி நிலவும் இன்ப உலகமாக மாறுமென்பதில் ஐயம் உண்டோ?

---

## 25. நீ, ஒரு நாளில் செய்ய வேண்டுவன:

தம்பீ,

1. நீ விழித்தவுடன் படுக்கையினின்று எழுந்திரு; உடனே, உலக மக்கள் நன்மையுறல் வேண்டுமெனப் பிரார்த்தனை செய்; தீய எண்ணங்கள், அவற்றினின்று பிறக்கும் செயல்கள் — உன்னை அணுகாதிருக்க வேண்டுமென இறைஞ்சு; நீ இதுவரையிற் செய்துள்ள தவறுகளை மன்னிக்குமாறு உன் பரம பிதாவை வேண்டுக. இங்ஙனம் நீ பிரார்த்தனை செய்தால் உன் மனம் மாசற்றுப் பொலிவுடன் விளங்கும். உனது முகம் அன்று மலர்ந்த தாமரை மலரை ஒத்திருக்கும்.

2. நீ, பின்னர்த் தூய நீரில் நீராடு; நீராடுகையில், உன் உடலின் உள்ள அழுக்குடன் உள்ளத்தில் உள்ள தூய்மையற்ற எண்ணங்களையும் உறுதியாய்க் களைந்து விடுவதாக நினைப்பாயாக.

3. நீ செய்யக் கடமைப்படாத எந்த வேலையையும் செய்யாதே; ஒன்றைச் செய்யுமுன், அதைச்

செய்து முடிப்பது உன் கடமையா என்பதை உறுதிப்படுத்திக்கொள்.

4. நீ, வீணாக ஒரு வார்த்தையையும் பேச வேண்டா; பேசுவதற்கு முன்னர், நீ பேசுவது நன்மையைப் பயக்குமா தீமையைப் பயக்குமா என்பதை ஆராய்ந்து பார்.

5. உனது தூய மனத்தில் தீய எண்ணம் உண்டாக நீ, இடந் தரவேண்டா; எப்போதும் நல்ல எண்ணங்களே உன் மனத்தில் தோன்றுமாறு செய்க.

6. நீ உண்ணும்போது, உன் உடலுக்கு நன்மையைத் தரத் தக்க உணவையே உட்கொள்வதாக நினைக்கும்படி உன் மனத்தைப் பழக்குதல் வேண்டும்; உணவு கொள்ளும்போது பிற எண்ணங்களைத் தோன்றவிடலாகாது; உணவிலேயே சிந்தனையைச் செலுத்தி உற்சாகத்தோடு உண்ணுதல் வேண்டும்; அளவுக்குமேல் உண்ணுதல் தவறு. அங்ஙனம் உண்ணுதல் பலநோய்களை உண்டாக்கி, உனது மாசற்ற உடலைப் பாழாக்கிவிடும்.

7. நீ, நீண்ட நேரம் வாசிக்க வேண்டா. அரை மணி நேரம் வாசித்தவற்றைப் பற்றிப் பல மணி நேரம் சிந்தனை செய். இயன்றவரையில் ஏகாந்த இடங்களில் போய் அமர்ந்து சிந்தனை செய்; அங்கு உன் எண்ணத்தோடு தனிமையாக இரு; உன்னை நீயே சீர்ப்படுத்திக்கொள்ளக் கூடுமென்னும் நம்பிக்கையை நீ, வளர்க்க வேண்டும்; பிறரால் சீர்ப்படுவோமென்னும் பொய்யான நம்பிக்கையை ஒழித்துவிடு; உன்னை உயர்ந்தவனாக்கிக் கொள்பவனும் தாழ்ந்தவனாக்கிக் கொள்பவனும் நீயே என்பதை உறுதியாக நம்பு. எதற்கும் பிறர்

உதவியை நாடாதே. எல்லா உதவிகளும் உன்னுள்ளே இருக்கின்றன. சிறிது நேரம் சிந்தனை செய்; அவை தாமாகவே உனக்குத் தோன்றும். எத்தகைய துன்பம் வரினும், நீ, மனங் கலங்க வேண்டா; தனியே அமர்ந்து எண்ணங்களை ஒரு நிலைப்படுத்திச் சிந்தித்துப் பார்; உன் துன்பந் துடைக்கும் இன்ப ஒளியைக் காண்பாய். இவ்வொளி உன்னுள் இருக்கையில், பிறர் யோசனையைக் கேட்பது எவ்வளவு அறியாமை என்பது அப்போதுதான் உனக்கு விளங்கும்.

8. இரவில் படுக்கைக்குச் செல்லுமுன், நீ, காலையிற் செய்தவாறே பிரார்த்தனை செய்; அந்த நாளில் நீ செய்த காரியங்களை ஒன்றன் பின் ஒன்றாக நினைத்துப் பார்; எவை தீயவை என்பதை அறிந்து, அவற்றை மேலும் செய்யக் கூடாதென முடிவு செய்துகொள். உனது முடிபு அசைக்க முடியாததாக இருத்தல் வேண்டும். அப்போதுதான் உன் எண்ணங்கள் பலப்படும்; இன்ப வாழ்வு உன்னுடையதே ஆகும்.

THE B. N. PRESS, EDUCATIONAL PRINTERS, MADRAS.